بسم الله الرحمن الرحيم

تشرف بإعداد وترجمة هذا الكتاب


**شعبة توعية الجاليات بالزلفي**

**وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد**

**الزلفي١١٩٣٢ - المنطقة الصناعية - ص.ب: ١٨٢**

**ت: ٠٦٤٢٢٥٦٥٧ - فاكس: ٤٢٢٤٢٣٤**

**حساب الطباعة: ١/٦٩٦٠ - الحساب العام: ٣/٦٩٥٩**

**شركة الراجحي المصرفية - فرع الزلفي**





**இந்நூல் தயாரிப்பு:**

**ஜுல்ஃபி வெளிநாட்டவர் அழைப்பு மையம். ஜுல்ஃபி-*11932*. சவூதி .**

***F.G.O. at Zulfi - Zulfi 11932. P.O. Box: 182. Saudi Arabia. Phone: 064225657 Fax: 064224234***

**منهاج المسلم**

**أعده وترجمه للغة التاميلية**

**شعبة توعية الجاليات في الزلفي**

الطبعة الأولى: ١٤٢١/٩ هـ.


ح المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي ، ١٤٢١هـ.

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات (الزلفي)

منهاج المسلم - بالزلفي

... ص؛ ... سم

ردمك: ٥-٩٧-٨١٣-٩٩٦٠

(النص باللغة التاميل)

١- الإسلام - مبادىء عامة أ- العنوان

ديوي ٢١١ ٢١/٤٣٦٩

رقم الإيداع: ٢١/٤٣٦٩

ردمك: ٥-٩٧-٨١٣-٩٩٦٠

صف وإخراج: **شعبة توعية الجاليات في الزلفي**

# பொருளடக்கம்

# منهاج المسلم

# முஸ்லிமின் வழிமுறை

## அல்லாஹ்வை நம்புவது

ஒரு முஸ்லிம் அல்லாஹ்வை எவ்வாறு நம்ப வேண்டுமெனில், இறைவன் ஒருவன் இருக்கின்றான். அவன்தான் வானங்களையும் பூமியையும் படைத்தவன்! மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் அறிந்தவன். அனைத்துக்கும் இரட்சகனும் எஜமானனும் அவனே! வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறுயாரும் இல்லை. அவன் பரிபூரணமானவன்! அனைத்து குறைகளை விட்டும் பரிசுத்தமானவன்! என்று நம்ப வேண்டும். இதற்கு அறிவுப்பூர்வமாகவும் ஆதாரப்பூர்வமாகவும் சான்றுகள் உள்ளன. அவற்றுள் சில:

- அல்லாஹ் ஒருவன் இருக்கின்றான்; அவனே சகல படைப்பினங்களையும் படைத்துப் பரிபாலிப்பவன்; அவனுக்கு அழகிய திருநாமங்கள், பண்புகள் இருக்கின்றன என்பது பற்றி அவனே கூறுவது.

நிச்சயமாக அல்லாஹ்தான் உங்களுடைய இறைவன்! அவன் எத்தகையவன் எனில் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான். பின்னர் அர்ஷில் அமைந்தான். அவன் இரவைக் கொண்டு பகலை மூடுகின்றான். இரவுக்குப் பின்னால் பகல் விரைந்து வருகின்றது. அவனே சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றைப் படைத்தான். அவையனைத்தும் அவனுடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டிருக்கின்றன. அறிந்து கொள்ளுங்கள்: படைக்கும்

ஆற்றலும் கட்டளை பிறப்பிக்கும் அதிகாரமும் அவனுக் குரியவையே. அனைத்துலகங்களுக்கும் அதிபதியாகிய அல்லாஹ் அருள்வளமிக்கவனாவான்! (7:54)

மூஸாவே! நான்தான் அல்லாஹ். அகிலத்தாரின் அதி பதி! (28:30) நிச்சயமாக நான்தான் அல்லாஹ்! என்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. எனவே என்னை வணங்கு வீராக. என்னை நினைவு கூறுவதற்காகத் தொழுகையை நிலைநிறுத்துவீராக. (20:14)

- இதுபோல மாறுபட்ட இவ்வுலகங்களும் வேறுபட்ட படைப்பி னங்களும் அவற்றைப் படைத்த இறைவன் ஒருவன் இருக் கிறான்; அவனே அல்லாஹ்! என்பதற்குச் சான்று பகர்வது.

ஏனெனில் இவ்வுலகங்களைப் படைத்தவன், அவற்றை உருவாக்கியவன் நான்தான் என்று வாதிடக்கூடிவன் இவ் வுலகில் (அல்லாஹ்வைத் தவிர) வேறு யாரும் இல்லை. உருவாக்குபவன் இல்லாமல் எதுவும் உருவாகுவது சாத் தியமில்லை என்றுதானே மனித அறிவும் கூறுகிறது! எனவே இதுபோன்ற அறிவுப்பூர்வமான, ஆதாரப்பூர்வமான மற்றும் வேறு பல சான்றுகளின் அடிப்படையில்தான் ஒரு முஸ்லிம் அல்லாஹ்வையும் அவன்தான் அனைத்தையும் படைத்து பரிபாலிப்பவன்; முன்னோர் பின்னோர் அனைவருக்கும் இறைவன் என்பதையும் நம்புகிறான்.

அல்லாஹ்தான் அனைத்தையும் படைத்துப் பரிபாலிப்ப வன். இதில் அவனுக்கு இணை யாரும் கிடையாது. "அகில உலகங்களையும் படைத்துப் பரிபாலனம் செய்யக்கூடிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!" (1:2) இதற்கான அறி வுப்பூர்வமான ஆதாரங்கள் வருமாறு:

1. ஒவ்வொரு பொருளையும் படைத்தவன் அவன் மட்டுமே! அப்பொருள் சிறியதாக இருந்தாலும் அல்லது பெரியதாக

இருந்தாலும் சரியே. "ஒவ்வொரு பொருளையும் படைத்த வன் அல்லாஹ்வே என்று (நபியே) நீர் கூறும்." (13:16)

2. அனைத்துப் படைப்பினங்களுக்கும் அவன் மட்டுமே ரிஸ்க்- வாழ்வாதாரம் வழங்குபவன். உணவளிக்க அல்லாஹ் பொறுப்பேற்காத எந்த உயிரினமும் பூமியில் இல்லை. (11:6)

3. அல்லாஹ்தான் படைத்துப் பரிபாலிப்பவன் என்பதற்குச் சரியான மனித இயல்பு சான்று பகர்கின்றது. இதை ஒவ் வொரு மனிதனும் உள்ளூர உணர்கின்றான்.

"ஏழு வானங்களைப் படைத்துப் பரிபாலிப்பவனும் மகத்துவமிக்க அர்ஷின் உரிமையாளனும் யார்?" என்று (நபியே! இம்மக்களிடம்) கேளுங்கள், "அல்லாஹ்தான்" என இவர்கள் நிச்சயம் பதில் கூறுவார்கள். (23:86,87)

4. ஒவ்வொரு பொருளுக்கும் உரியவன், பொதுவாக ஒவ் வொரு பொருளையும் நிர்வகிப்பவன் அவன் மட்டுமே!

(நபியே! இவர்களிடம்) கேளும்: "வானத்திலிருந்தும் பூமி யிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? மேலும் உங்களிடமுள்ள கேட்கும் மற்றும் பார்க்கும் ஆற்றல்கள் யாருடைய அதிகாரத்தில் உள்ளன? மேலும் உயிரற்றதிலி ருந்து உயிருள்ளதையும், உயிருள்ளதிலிருந்து உயிரற்ற தையும் தோற்றுவிப்பவன் யார்? இன்னும் அகிலத்தின் ஒழுங்கமைப்பை நிர்வகிப்பவன் யார்?"

அதற்கவர்கள், "அல்லாஹ்தான்" என பதில் கூறுவார் கள். "அவ்வாறாயின் நீங்கள் (உண்மைக்கு மாறாக நடப் பதை) தவிர்ந்து கொள்ளக் கூடாதா?" என்று கேளும். ஆகவே இந்த அல்லாஹ்தான் உங்களின் உண்மையான இறைவன். இந்த உண்மையைக் கைவிட்ட பிறகு வழிகேட் டைத் தவிர வேறு என்ன எஞ்சியிருக்கும்? (10:31,32)

- அவ்வாறே இவ்வுலகில் முன்னால் சென்றவர்கள் பின்னால் வரக்கூடிவர்கள் அனைவருக்கும் இறைவன் அல்லாஹ் தான். அவனைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன், உண்மையான கடவுள் வேறுயாருமில்லை என்று முஸ்லிம் நம்ப வேண்டும்.

அல்லாஹ் நீதியை நிலைநாட்டக்கூடியவனாக உள்ள நிலையில் வணக்கத்திற்குறிய இறைவன் அவனைத் தவிர வேறுயாரும் இல்லை என்பதற்கு அவனே சான்று பகர்கின்றான். மேலும் வானவர்களும் அறிவுடையோரும் இவ்வாறே சான்று பகர்கின்றனர். (உண்மையில்) அவனைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை. அவன் வல்லமைமிக்கவன், நுண்ணறிவாளன். (3:18)

உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். அளவிலாக் கருணையும் இணையிலாக் கிருபையும் உடையோனாகிய அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. (2:163)

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமே என்பதற்கான ஆதாரங்களில் சில:

எல்லா இறைத்தூதர்களும் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றே கூறினர். அவனை மாத்திரம் வணங்க வேண்டும் என்பதன் பக்கமே தம் சமுதாயத்தவர்களை அழைத்தனர். நூஹ் (அலை), 'எனது சமுதாயத்தவரே! அல்லாஹ்வை வணங்குங்கள்; அவனைத் தவிர வேறு இறைவன் உங்களுக்கு இல்லை' என்று கூறினார்கள். (7:59)

இவ்வாறே ஹூத், ஸாலிஹ், ஷுஐப் (அலை) ஆகியோரும் கூறினார்கள். (பார்க்க: அல்குர்ஆன் 11:50, 61, 84) மேலும் அல்லாஹ் கூறுகிறான்: 'அல்லாஹ்வையே வணங்குங்கள்; அவனல்லாதவற்றை வணங்குவதை விட்டும் தவிர்ந்து

கொள்ளுங்கள்' என்று (போதிக்குமாறு) நாம் ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒரு தூதரை அனுப்பினோம். (16:36)

நபி(ஸல்) அவர்கள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கூறினார்கள்: நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள். உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவி தேடு. (திர்மிதி)

என்னைக் கொண்டு உதவி தேடப்பட மாட்டாது. அல்லாஹ்வைக் கொண்டே உதவி தேடப்படும்! என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: உப்பாதா பின் அஸ்ஸாமித்(ரழி), நூல்: தப்ரானி.

யார் அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்கிறாரோ அவர் இணைவைத்து விட்டார் என நபி(ஸல்)அவர்கள் கூறியதாக இப்னு உமர்(ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நூல்: திர்மிதி.

இப்னு மஸ்வூது(ரழி)அவர்கள் அறிவிப்பதாவது: உண்மையில் மந்திரிப்பது, தாவீஸ் அணிவது, தலையணை மந்திரம் ஆகியவை ஷிர்க்காகும் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். (அஹ்மத்)

- மேலும் அல்லாஹ்வுக்கு அழகிய திருநாமங்கள், உயர்ந்த பண்புகள் உள்ளன. அவற்றில் அவனுக்கு நிகர், இணை யாரும் கிடையாது என்றும் நம்ப வேண்டும். அவற்றுக்கு தவறான விளக்கம் தருவதோ, அவற்றை மறுப்பதோ அல்லது அவற்றை ஏனைய படைப்பினங்களின் பண்புகளோடு ஒப்பிடுவதோ கூடாது. மாறாக அல்லாஹ்வுக்கு என்னென்ன பண்புகள், பெயர்கள் இருப்பதாக அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறியிருக்கின்றார்களோ அவற்றை அப்படியே நம்ப வேண்டும்.

மேலும் அல்லாஹ்வும் அவன் தூதரும் என்னென்ன குறைகளை விட்டும் அல்லாஹ்வைத் தூய்மைப்படுத்தி இருக்கிறார்களோ அவற்றை அப்படியே தூய்மைப்படுத்த வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்:அல்லாஹ்வுக்கு அழகிய திருநாமங்கள் உள்ளன. அவற்றைக் கொண்டே அவனை அழையுங்கள். அவனுடைய திருநாமங்களைத் தவறாகப் பயன்படுத்துபவர்களை விட்டுவிடுங்கள். அவர்களுடைய செயல்களுக்காக அவர்கள் (தக்க) கூலி கொடுக்கப்படு வார்கள். (7:180)

(நபியே! இவர்களிடம்) கூறும்: நீங்கள் அல்லாஹ் என்று அழையுங்கள். அல்லது ரஹ்மான் என்று அழையுங்கள். எப்பெயரைக் கொண்டு நீங்கள் அவனை அழைத்தாலும் அவனுக்கு (பல) அழகிய பெயர்கள் இருக்கின்றன. (17:110)

இதுபோல அல்லாஹ்வின் பண்புகள், திருநாமங்கள் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறிய இன்னும் சில ஆதாரங்கள்:

'இரு மனிதர்களைப் பார்த்து அல்லாஹ் சிரிக்கின்றான். அவ்விருவரில் ஒருவர் மற்றவரை வெட்டிக் கொன்று விடுகி றார். அவ்விருவரும் சொர்க்கத்தில் இருப்பார்கள்' என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நூல்: புகாரீ, முஸ்லிம்

நரகில் போட வேண்டியவைகள் போடப்பட்டுக் கொண் டேயிருக்கும். இன்னும் இருக்கிறதா இன்னும் இருக்கிறதா என்று நரகம் கேட்டுக் கொண்டேயிருக்கும். இறுதியில் கண் ணியத்திற்குறிய இறைவன் தனது காலை (மற்றொரு அறி வீப்பின்படி தனது பாதத்தை) அதில் வைப்பான். அதில் உள்ளவைகள் ஒன்றோடொன்று சேர்ந்து நரகம் நிரம்பி விடும். அப்போது நரகம் போதும் போதும் என்று கூறும். நபிமொழி. அறிவிப்பவர்: அனஸ் (ரழி), நூல்: புகாரீ, முஸ்லிம்

மறுமை நாளில் அல்லாஹ் பூமியை (தனது இடது கையால்) பிடித்து வானத்தை தனது வலது கையால் சுருட்டி விடு வான். பிறகு நான் தான் அரசன்! எங்கே இப்புவியின் அரசர் கள்? என்று கேட்பான் என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா(ரழி) அறிவிக்கிறார்கள். நூல்: புகாரீ

- ஒரு முஸ்லிம் அல்லாஹ்வின் பண்புகளை நம்பும் போதும் அவற்றைக் கொண்டு அவனை வர்ணித்துக் கூறும்போதும் அல்லாஹ்வுடைய கை உதாரணமாக படைப்பினங்களின் கையைப் போன்று இருக்கிறது என்று எந்த அர்த்தத்திலே யும் எண்ணிவிடக் கூடாது. அதுபோன்ற சிந்தனை அவன் உள்ளத்திலும் உதித்து விடக்கூடாது. மாறாக அல்லாஹ் வுக்கும் கை இருக்கிறது நமக்கும் கை இருக்கிறது என்று மட்டும் சொல்லிக் கொள்ளலாம். ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்: அவனைப் போன்று எதுவுமில்லை! அவன் (யாவற்றையும்) கேட்கக் கூடியவன், பார்க்கக் கூடியவன். (42:11)

## நபித்தோழர்களை நேசிப்பது

நபித்தோழர்களையும் நபியின் குடும்பத்தார்களையும் நே சிப்பது கடமை என்றும் அவர்கள் மற்ற முஃமின்கள்,முஸ்லிம் களை விடச் சிறந்தவர்கள் என்றும் ஒரு முஸ்லிம் நம்ப வேண் டும். சிறப்பில் அவர்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வு உண்டு. இஸ்லாத்தை முதன் முதலில் ஏற்றுக் கொண்டதைப் பொருத் துதான் அவர்களுடைய உயர் அந்தஸ்து இருக்கும்.

அவர்களில் சிறந்தவர்கள் நேர்வழி பெற்ற கலீஃபாக்கள். அடுத்து சொர்க்கம் குறித்து நற்செய்தி கூறப்பட்ட பத்துப்பேர் கள். அவர்கள் நேர்வழி பெற்ற நான்கு கலீஃபாக்கள்,தல்ஹா பின் உபைதில்லாஹ்(ரலி), ஸுபைர் பின் அவாம்(ரலி), ஸஃத்

பின் அபீவக்காஸ்(ரலி),ஸயீத் பின் ஸைத்(ரலி), அபூஉபைதா பின் ஜர்ராஹ்(ரலி), அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப்(ரலி) ஆகியோர். அதற்கடுத்து பத்ருப் போரில் கலந்து கொண்டவர்கள். அதற்கடுத்து மேற்கூறப்பட்ட பத்துப் பேர்கள் அல்லாமல் சொர்க்கம் குறித்து நற்செய்தி கூறப்பட்ட இன்னும் சிலர். உதாரணம்: பாத்திமா(ரலி),அவர்களின் மக்களான ஹஸன் (ரலி), ஹுஸைன், மேலும் ஸாபித் பின் கைஸ்(ரலி), பிலால் பின் ரீபாஹ்(ரலி) மற்றும் சிலர்.

- இவ்வாறே இஸ்லாத்திற்காகப் பாடுபட்ட இமாம்களைக் கண்ணியப்படுத்துவதும், மதிப்பதும் கடமை என்றும் நம்ப வேண்டும்.

  அவர்கள் யாரெனில், ஸஹாபாக்களை அடுத்தடுத்த காலங்களில் வாழ்ந்த, திருக்குர்ஆனை நன்கு அறிந்த- அதை மனனம் செய்து அதை அழகிய முறையில் ஓதக் கூடிய காரீகள், ஃபிக்ஹு மற்றும் ஹதீஸ் கலை வல்லுநர்கள், திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் போன்றவர்கள்.

- அதுபோல ஒரு முஸ்லிம் தங்களுடைய காரியங்களுக்குப் பொறுப்பு வகிக்கின்ற- அதிகாரம் வகிக்கின்ற தலைவர் (அமீர்)களுக்குக் கட்டுப்படுவதும் அவர்களை மதிப்பதும் அவர்களுடன் சேர்ந்து அறப்போர் புரிவதும் கடமை என்று நம்பும் அதேநேரத்தில் அவர்களுக்கு எதிராகச் செயல்படுவது ஹராம் என்றும் நம்பவேண்டும்.

  ஆகவே ஒரு முஸ்லிம் மேற்கூறப்பட்ட அனைவருடனும் சில ஒழுக்கங்களுடன் நடந்து கொள்வது அவசியமாகும்.

## நபித்தோழர்கள், நபியின் குடும்பத்தினர்

- ஒரு முஸ்லிம் அவர்களை நேசிக்க வேண்டும்;அல்லாஹ்வும் அவன் தூதரும் அவர்களை நேசிப்பதால்.

❑ அவர்கள் ஏனைய முஃமின்கள், முஸ்லிம்களை விடச் சிறந்தவர்கள் என நம்ப வேண்டும்.

ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்: (இஸ்லாத்தின் அழைப்புக்கு) முதன் முதலில் பதிலளித்த முஹாஜிர்கள், அன்ஸாரிகளைக் குறித்தும், அவர்களை யார் நேர்மையோடு பின்பற்றினார்களோ அவர்களைக் குறித்தும் அல்லாஹ் திருப்தி கொண்டான். அவர்களும் அவனைக் குறித்து திருப்தியடைந்தார்கள். (9:100)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: என்னுடைய தோழர்களைத் திட்டாதீர். ஏனெனில் (உங்களில்) ஒருவர் உஹுத் மலை அளவு தங்கத்தை (இறைவழியில்) செலவு செய்தாலும் அவர்களில் ஒருவர் செலவு செய்த ஒரு முத்து அல்லது அதில் பாதி அளவைக்கூட அவரால் அடைந்து விட முடியாது. அறிவிப்பவர்: அபூஸயீத் (ரழி), புகாரீ, முஸ்லிம்

❑ பொதுவாக ஸஹாபாக்களில் சிறந்தவர் அபூபக்கர் (ரலி) அடுத்தடுத்து உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலீ (ரலி) என்று கருத வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் உயிரோடு இருக்கும்போது (ஸஹாபாக்களில் சிறந்தவர்கள்) முதலில் அபூபக்கர் (ரலி), பிறகு உமர் (ரலி), பிறகு உஸ்மான் (ரலி), அதன் பிறகு அலீ என்று தான் நாங்கள் கூறி வந்தோம். இது நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிய வந்ததும் அவர்கள் இதை மறுக்கவில்லை.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி), நூல்:புகாரீ

❑ அவர்களின் தவறுகளை எடுத்துச் சொல்வதும் அவர்களுக்கிடையே நடந்த கருத்து வேறுபாடுகளைக் கூறுவதும் கூடாது.

- நபி(ஸல்) அவர்களின் மனைவியரின் கண்ணியத்தையும் நம்ப வேண்டும். அவர்கள் பரிசுத்தமானவர்கள;(அவதூறு களை விட்டும்) தூய்மைப்படுத்தப்பட்டவர்கள். மேலும் அவர் களில் சிறந்தவர் கதீஜா (ரலி), ஆயிஷா (ரலி) என்றும் கருத வேண்டும்.

## காரிகள், ..பிக்ஹு, ஹதீஸ் கலை வல்லுநர்கள்

- ஒரு முஸ்லிம் அவர்களை நேசிக்க வேண்டும். அவர்களுக் காக அருளை வேண்டிப் பிரார்த்திக்க வேண்டும். அவர்க ளின் சிறப்பை ஒப்புக் கொள்ள வேண்டும்.

- அவர்களைப் பற்றி நல்லதையே கூற வேண்டும். அவர்க ளைப் பற்றி குறை கூறவோ தப்பபிப்ராயம் கொள்ளவோ கூடாது. திண்ணமாக அவர்கள் அல்லாஹ்வுக்காகவே தூய உள்ளத்தோடு (குர்ஆன், ஹதீஸை) ஆய்வு செய்யக் கூடியவர்களாக இருந்தார்கள் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். மேலும் அவர்களுக்குப் பின் வந்தவர்களின் கருத்தை விடவும் அவர்களின் கருத்துக்கு முன்னுரிமை வழங்க வேண்டும். அல்லாஹ்வுடைய, அவன் தூதருடைய அல்லது நபித்தோழர்களுடைய கூற்றுக்காகவே அன்றி அவர்களுடைய கூற்றை விட்டுவிடக் கூடாது.

- இமாம் மாலிக் (ரஹ்), இமாம் ஷா..பி (ரஹ்), இமாம் அஹ்மத் (ரஹ்), இமாம் அபூ ஹனீ..பா (ரஹ்) ஆகிய நான்கு இமாம்கள் தொகுத்த நூல்களும் அவர்கள் கூறிய மார்க்க சம்பந்த மான விஷயங்கள், ..பிக்ஹு மற்றும் ஷரீஅத் சட்டங்கள் அனைத்தும் திருக்குர்ஆன் மற்றும் நபிமொழியிலிருந்து பெறப்பட்டதே. இவ்விரு அடிப்படை ஆதாரங்களிலிருந்து அவர்கள் விளங்கியதைத் தவிர அல்லது இவ்விரண்டிலி ருந்து அவர்கள் ஆய்வு செய்து பெற்றதைத் தவிர அல்லது

இவ்விரண்டையும் ஒப்பு நோக்குவதன் (கியாஸ்) மூலம் பெறப் பட்டதைத் தவிர வேறெதுவும் அவர்களிடம் இல்லை.

- அவர்கள் மனிதர்கள்தாம். அவர்கள் சரியாகவும் சொல்லியி ருக்கலாம். தவறாகவும் சொல்லியிருக்கலாம் என்று கருத வேண்டும். சிலவேளை அவர்கள் ஏதாவது ஒரு சட்டத் தில் உண்மைக்குப் புறம்பாக (ஒன்றைச்) சொல்லியிருக்க லாம். இது வேண்டுமென்றே அல்ல. மாறாக மறதியாக அல் லது பாராமுகமாக அல்லது ஆழ்ந்த ஆய்வின்றி அவ்வாறு சொல்லியிருக்கலாம். இதனால்தான் ஒரு முஸ்லிம் அவர்க ளில் ஒருவருடைய கருத்தை விட்டுவிட்டு இன்னொருவரது கருத்தை மாத்திரம் பலமாகப் பிடித்துக் கொண்டிருக்கக் கூடாது. மாறாக அவர்களில் எவரது கருத்தையும் அவர் எடுத்துக் கொள்ளலாம்.

## அதிகாரம் வகிப்பவர்கள்

- ஒரு முஸ்லிம் அவர்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பதை கட மை என்று கருத வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கை கொண்டவர் களே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள். அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். மேலும் உங்களில் அதிகா ரம் உடையவர்களுக்கும் (கீழ்ப்படியுங்கள்) (4:56)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (அதிகாரம் உடைய வர்களுக்கு) நீங்கள் செவிசாயுங்கள்; கட்டுப்படுங்கள். உலர்ந்த திராட்சையைப் போன்ற தலையுடைய ஒரு நீக் ரோ அடிமை உங்களுக்குத் தலைவரானாலும் சரியே. அறிவிப்பவர்: அனஸ் (ரழி), நூல்: புகாரீ

ஆயினும் அல்லாஹ்வுக்கு மாறுசெய்யும் விஷயத்தில் அவர்களுக்குக் கட்டுப்படுதல் கூடாது. ஏனெனில் அவர்

களுக்குக் கட்டுப்படுவதை விட அல்லாஹ்வுக்குக் கட்டுப் படுவதற்கே முன்னுரிமை வழங்க வேண்டும். "படைத்தவ னுக்கு மாறுசெய்யும் விஷயத்தில் எந்தப் படைப்பினங்க ளுக்கும் கட்டுப்படுதல் கூடாது" என்பது நபிமொழி.

(அபூநயீம், அஹ்மத்)

- அவர்களுக்கெதிராக செயல்படுவதும் பகிரங்கமாக அவர் களுக்கு மாறு செய்வதும் ஹராம் என்றும் கருத வேண்டும்.

நபி(ஸல்) கூறினார்கள்: தன்னுடைய அமீரிடம் ஒருவர், தான் விரும்பாததைக் கண்டால் பொறுத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் அதிகாரம் வகிப்பவருக்கு கட்டுப்படு வதை விட்டும் ஒருவர் ஒரு ஜாண் வெளியேறிவிட்டால் அவர் அறியாமைக் காலத்தவர் மரணித்ததைப் போல மர ணிப்பார். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), புகாரீ, முஸ்லிம்

- இறைவா! அவர்களைச் சரியாகவும் நேர்மையாகவும் நடக் கவைப்பாயாக. அதற்கு நீ உதவி செய்வாயாக. தீமையை விட்டும் அவர்களைப் பாதுகாப்பாயாக என்று இறைவனி டம் அவர்களுக்காக துஆ செய்ய வேண்டும். ஏனென்றால் அவர்கள் சீராக நடந்தால் தான் சமுதாயம் சீராக இருக் கும். அவர்கள் சீர்கெட்டுப் போய்விட்டால் சமுதாயமும் சீர் கெட்டுப் போய்விடும்.

- அவர்கள் பாவமான, ஹராமான காரியங்களைச் செய்தா லும்-அவர்கள் இறைநிராகரிப்புக் காரியங்களைச் செய்யா தவரை அவர்களுக்குப் பின்னால் நின்று தொழவேண்டும். அவர்களோடு சேர்ந்து ஜிஹாதும் செய்யவேண்டும். ஏனெ னில் 'அதிகாரம் வகிப்பவர்களின் சொல்லைக் கேளுங்கள் அவர்களுக்குக் கட்டுப்படுங்கள். அவர்கள் மீது சுமத்தப் பட்ட கடமைக்கு அவர்களே பொறுப்பு. உங்கள் மீது சுமத் தப்பட்ட கடமைக்கு பொறுப்பு நீங்களே!' என நபி(ஸல்)

அவர்கள் கூறியதாக அல்கமா (ரழி) அவர்கள் தம் தந்தை யிடமிருந்து அறிவிக்கிறார்கள். நூல்: முஸ்லிம்

உப்பாதா பின் ஸாமித் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் பின் வருமாறு உறுதிப் பிர மாணம் எடுத்துக் கொண்டோம்: அதாவது நாங்கள் உற் சாகமாக இருக்கும்போதும் சோம்பலுடன் இருக்கும் போ தும் கஷ்டமான நேரத்திலும் இலேசான நேரத்திலும், எங்கள் உரிமை பறிக்கப்படும் போதும் அதிகாரம் வகிப்ப வர்களுக்கு நாங்கள் கட்டுப்படுவோம்; அவர்களுடைய சொல்லைக் கேட்போம்; அதிகாரம் குறித்து அவர்களிடம் தர்க்கம் செய்ய மாட்டோம். தெளிவான இறைநிராகரிப்பை அவர்களிடம் நாங்கள் கண்டாலே ஒழிய. (புகாரி, முஸ்லிம்)

## அல்லாஹ்வுடன்...

அல்லாஹ்வுடன் நடந்து கொள்ளவேண்டிய ஒழுங்குகள்:

- ஒரு முஸ்லிம் தன் தாயின் கருவறையில் இந்திரியத் துளி யாக இருந்ததிலிருந்து அல்லாஹ் அவனுக்கு அருளிய அளப்பறிய அருட்கொடைகளை- இவ்வருட்கொடைகள் நாளை மறுமையில் அவன் இறைவனைச் சந்திக்கும் வரை அவனுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும்- எண்ணிப் பார்த்து அதற்காக வல்ல நாயனுக்கு, அவனை தனது நாவால் புகழ்ந்து, துதி பாடி, தன் அவயங்களை அவனு டைய வழிபாட்டில் ஈடுபடுத்துவதன் மூலம் நன்றி செலுத்த வேண்டும்.

இதுதான் அல்லாஹ்வுடன் நடந்து கொள்ள வேண்டிய ஒழுக்கமாகும். காரணம், அருட்கொடைகளை அள்ளித் தந்தவனுடைய சிறப்பை மறுப்பதும் அவற்றுக்கு நன்றி கொல்வதும் ஒழுங்கல்லவே!

அல்லாஹ் கூறுகிறான்: உங்களுக்குக் கிடைத்துள்ள அருட்கொடைகள் எல்லாம் அல்லாஹ்விடமிருந்து வந்த வைதாம். (16:53) அல்லாஹ்வின் அருட்கொடைகளை நீங்கள் எண்ணி முயன்றால் அவற்றை உங்களால் எண்ணவே முடியாது. (16:18)

மேலும் கூறுகிறான்: என்னை நீங்கள் நினைவு கூருங்கள். நானும் உங்களை நினைவு கூருகின்றேன். (2:152)

- தன்னையும் தன்னுடைய எல்லா நிலைமைகளையும் அல்லாஹ் சூழ்ந்தறிபவனாய் இருக்கின்றான் என்பதை ஒரு முஸ்லிம் உணர வேண்டும். அப்போதுதான் அவனுடைய உள்ளத்தில் அல்லாஹ்வைப் பற்றிய பயம், மதிப்பு மற்றும் கண்ணியம் ஏற்படும். அதனால் அல்லாஹ்வுக்கு மாறு செய்வதற்கும் அவனுக்கு கட்டுப்படாமல் இருப்பதற்கும் அவன் வெட்கப்படுவான்.

இது அல்லாஹ்வுடன் நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கமாகும். ஏனெனில் ஒரு அடிமை தன் எஜமானுக்கு-அவனோ தன்னைச் சூழ்ந்தறிந்து கொண்டிருக்கிற நிலையில்-பகிரங்கமாக மாறுசெய்வதும் தீமைகளை, மோசமான காரியங்களைச் செய்வதும் ஒழுக்கமாக இருக்க முடியாதல்லவா?

அல்லாஹ் கூறுகிறான்: நீங்கள் இரகசியமாய்ச் செய்வதையும் வெளிப்படையாய்ச் செய்வதையும் அல்லாஹ் நன்கறிகின்றான். (16:19)

- அல்லாஹ் தன் மீது முழு ஆற்றல் பெற்றிருக்கிறான். அவனை விட்டால் தனக்கு வேறு புகலிடமோ, ஒதுங்குமிடமோ, தப்பிக்குமிடமோ கிடையாது என்பதையும் ஒரு முஸ்லிம் உணர வேண்டும். தனது காரியங்களை அவனிடமே ஒப்படைத்து அவன் மீதே நம்பிக்கை வைக்க வேண்டும்.

இதுவும் அவன், அவனைப் படைத்த இறைவனுடன் நடந்து கொள்ள வேண்டிய ஒழுக்கமே. ஏனெனில் புகலிடம் அளிக்க முடியாதவரிடம் புகலிடம் தேடுவதும் தவக்குல் வைக்க முடியாதவரிடம் தவக்குல் வைப்பதும் ஒழுங்காக இருக்க முடியாது.

அல்லாஹ் கூறுகிறான்: எந்த உயிரினமானாலும் அதன் குடுமி அவனுடைய பிடியிலேயே உள்ளது. (11:56) நீங்கள் முஃமின்களாக இருந்தால் அல்லாஹ்வின் மீதே தவக்குல் வையுங்கள். (5:23)

- ❑ தனக்கும் ஏனைய படைப்பினங்களுக்கும் அல்லாஹ் அருளிய அருட்கொடைகளை சிந்தித்துப் பார்த்து மென்மேலும் அவை தனக்குக் கிடைக்க வேண்டும் என ஆவல் கொள்ள வேண்டும்.

அதற்காக அவன் தூய்மையான முறையில் அல்லாஹ்வுக்குப் பணிந்து பிரார்த்தனை செய்ய வேண்டும். அழகிய சொற்களைக் கொண்டும் நற்செயல்களைக் கொண்டும் அல்லாஹ்விடம் வஸீலா தேட வேண்டும்.

இது அல்லாஹ்வுடன் அவன் நடந்து கொள்ள வேண்டிய ஒழுங்காக அமையும். ஏனெனில் எவனுடைய அருள் அனைத்தையும் சூழ்ந்திருக்கின்றதோ அவனுடைய அருள் மென்மேலும் கிடைப்பதை விட்டும் நிராசையடைவதும் எவனுடைய பேருபகாரம் எல்லா படைப்பினங்களையும் சூழ்ந்திருக்கின்றதோ அவனுடை பேருபகாரத்தை விட்டும் நம்பிக்கை இழப்பதும் எப்படி ஒழுங்காக இருக்க முடியும்?

அல்லாஹ் கூறுகிறான்: என்னுடைய அருள் அனைத்தையும் சூழ்ந்திருக்கின்றது. (7:156) அல்லாஹ்வின் அருள் குறித்து நம்பிக்கை இழந்து விடாதீர்கள். (12:87)

- இறைவனின் பிடி மிகக் கடுமையானது! அவன் பழிவாங்கும் ஆற்றலுடையவன் என்பதை உணர்ந்து, அவனுக்கு மாறு செய்யாமல் கட்டுப்பட்டு நடந்து கொள்வதன் மூலம் அவனை அஞ்சிக் கொள்ள வேண்டும்.

இது அல்லாஹ்விடம் அவன் நடந்துகொள்ளும் ஒழுங்காகும். ஏனென்றால் ஒன்றுக்கும் இயலாத பலவீனமான அடிமை வலிமையும் ஆற்றலுமிக்க, யாவற்றையும் அடக்கியாளக்கூடிய எஜமானுக்கு மாறு செய்வதும் அநியாயம் செய்வதும் ஒழுங்காக இருக்க முடியாதல்லவா?

அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ் ஒரு சமூகத்திற்கு தீமையை நாடிவிட்டால் அதனை யாராலும் தடுத்து நிறுத்திட இயலாது. அல்லாஹ்வுக்கு எதிராக அத்தகைய சமூகத்தாருக்கு உதவி செய்வோரும் எவருமிலர். (13:11)

உண்மையில் உம் இறைவனின் பிடி மிகக் கடுமையானது! (85:12)

- ஒரு முஸ்லிம் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டு அவனுடைய ஷரீஅத்தைப் பின்பற்றி நடக்கும் போது தனது வாக்குறுதி அவனுக்குக் கிடைத்து விட்டதாக- தனது திருப்தி என்ற ஆடையை அவனுக்கு அணிவித்து விட்டதாக அல்லாஹ் கருதுவது போன்று அந்த முஸ்லிம் அல்லாஹ்வுக்கு மாறு செய்யும் போதும் அவனுடைய கட்டளையை மீறும் போதும் அவன் எச்சரித்தது வந்து விட்டதாக, அவனுடைய வேதனை இறங்கி விட்டதாகக் கருத வேண்டும். இவ்வாறு நடந்து கொள்வது இறைவனைப் பற்றி அவன் நல்லெண்ணம் கொள்வதாக அமையும்.

இதற்கு மாறாக அவன் அல்லாஹ்வைப் பற்றி நல்லெண்ணம் கொள்ளாமல் அவனுக்கு மாறு செய்வதும் கட்டுப்படாமல் இருப்பதும் அதே நேரத்தில் அவன் தன்னைக்

கண்காணிப்பவனோ பாவம் செய்தால் அதற்காக தண்டிப் பவனோ அல்ல என நினைப்பதும் ஒழுங்காக ஆக முடியாது.

அல்லாஹ் கூறுகிறான்:...மாறாக, நீங்கள் செய்கின்ற செயல்களில் பெரும்பாலானவற்றை அல்லாஹ் கூட அறிய மாட்டான் என்று நீங்கள் எண்ணியிருந்தீர்கள். உங்கள் இறைவனைப் பற்றி நீங்கள் கொண்டிருந்த உங்களது இந்த எண்ணமே உங்களை அழிவில் ஆழ்த்தி விட்டது. அதே காரணத்தால் நீங்கள் இழப்புக்குரியவர்களாய் ஆகி விட்டீர்கள். (41:22)

அதுபோல ஒரு முஸ்லிம் அல்லாஹ்வுக்கு அஞ்சி அவனுக்குக் கட்டுப்பட்டு நடக்கும் அதே நேரத்தில் அவன் தனது நற்செயலுக்கு கூலி தரமாட்டான்; தனது வழிபாட்டை அவன் ஏற்றுக்கொள்ள மாட்டான் என்று நம்பினால் அல்லாஹ்வுடன் அவன் நடந்து கொள்ளும் ஒழுங்காக இருக்காது.

அல்லாஹ் கூறுகிறான்: எவர்கள் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் கீழ்ப்படிந்து, அல்லாஹ்வுக்கு அஞ்சி அவனுக்கு மாறு செய்வதைத் தவீர்த்துக் கொள்கின்றார் களோ அவர்கள்தாம் வெற்றியாளர்களாவர். (24:52)

சுருங்கச் சொல்லின் தனக்கு அருட்கொடைகளை வழங்கியதற்காக ஒரு முஸ்லிம் இறைவனுக்கு நன்றி செலுத்துவதும் அவனுக்கு மாறு செய்யத் துணியும்போது வெட்கப்படுவதும் அவன் பக்கம் வாய்மையோடு திரும்புவதும் அவன் மீதே நம்பிக்கை வைப்பதும் அவனது அருளை ஆவல் கொள்கின்ற அதே நேரத்தில் அவனுடைய தண்டனைக்கு அஞ்சுவதும் அவன் தனது வாக்குறுதியை நிறைவேற்றுவான், தான் நாடிய அடியார்களுக்கு தான் எச்சரித்ததை (தண்டனையை) இறைக்கி

வைப்பான் என அவனைப் பற்றி நல்லெண்ணம் கொள்வதும் அல்லாஹ்வுடன் அவன் நடந்து கொள்ளும் ஒழுங்குகளாகும். இவற்றை எந்த அளவுக்கு அவன் பற்றிப் பிடித்துக் கொள்கிறானோ- பேணிக்கொள்கிறானோ அந்த அளவுக்கு அவனுடைய அந்தஸ்தும் மதிப்பும் உயர்ந்து விடும்.

## அல்லாஹ்வின் வார்த்தையுடன்...

**அல்லாஹ்வீன் வார்த்தையுடன் நடந்து கொள்ள வேண்டிய ஒழுங்குகள்:**

அல்லாஹ்வீன் வார்த்தை பரிசுத்தமானது. மற்ற எல்லா வார்த்தைகளை வீட மேலானதும் சிறப்பானதும் ஆகும். திருக்குர்ஆன் அல்லாஹ்வுடைய வார்த்தையாகும். திருக்குர்ஆனின் கூற்றை கூறியவர் உண்மையைக் கூறியவராவார். திருக்குர் ஆனின்படி தீர்ப்பு வழங்கியவர் நீதமாக நடந்து கொண்டவராவார். திருக்குர்ஆனை அறிந்திருப்பவர்கள் அல்லாஹ்வுக் குரியவர்கள் அவனுக்கே உரித்தானவர்கள். அதைப் பற்றிப் பிடித்துக்கொள்பவர்கள் தப்பித்துக் கொள்வார்கள்; வெற்றி பெறுவார்கள். அதனைப் புறக்கணிப்பவர்கள்பேரிழப்புகளுக்கு ஆளாவார்கள்; அழிந்து போவார்கள் என ஒரு மு..மின் நம்ப வேண்டும்.

நபி (ஸல்) கூறினார்கள்: திருக்குர்ஆனை ஓதங்கள். திண்ணமாக அது மறுமையில் அதை ஓதியவருக்கு பரிந்துரை செய்யக்கூடியதாக வரும். அறிவீப்பவர்: அபூ உமாமா (ரழி), முஸ்லிம்

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: திண்ணமாக மக்களில் அல்லாஹ் வுக்கென்று சிலர் இருக்கின்றனர். அவர்கள் குர்ஆனின்படி நடப்பவர்கள். அவர்களே அல்லாஹ்வுக்குரியவர்கள். அவனுக்கே உரித்தானவர்கள். அறிவீப்பவர்: அனஸ் (ரழி)

நூல்: அஹ்மத், நஸயீ

திண்ணமாக இரும்பு துருப்பிடிப்பதுபோல உள்ளங்கள் துருப்பிடிக்கின்றன என்று நபி(ஸல்)அவர்கள் கூறியபோது அல்லாஹ்வின் தூதரே! அதை நீக்குவது எது? என்று கேட் கப்பட்டது. அதற்கு நபி(ஸல்)அவர்கள் திருக்குர்ஆனை ஓது வதும் மரணத்தை நினைவுகூருவதும்தான் என்று பதிலளித் தார்கள். (பைஹகீ)

எனவே ஒவ்வொரு முஸ்லிமும் திருக்குர்ஆன் எதை ஹ லால் என்று கூறுகிறதோ அதை ஹலால் என்றும் எதை ஹ ராம் என்று கூறுகிறதோ அதை ஹராம் என்றும் கூறவேண்டும். மேலும் அது கூறும் ஒழுக்கங்களைக் கடைபிடிப்பதோடு அது கூறும் பண்புகளையும் மேற்கொள்ள வேண்டும். இன்னும் அதை ஓதும்போது பின்வரும் ஒழுக்கங்களைக் கடைபிடிக்க வேண்டும்:

- உழூச் செய்துகொண்டு கிப்லாவை முன்னோக்கி மரியா தையோடும் கண்ணியத்தோடும் அமர்ந்து திருக்குர்ஆனை ஓதவேண்டும்.
- அவசரப்படாமல் நிறுத்தி நிதானமாக ஓதவேண்டும். முழுக் குர்ஆனையும் மூன்று நாட்களுக்குக் குறைவாக ஓதக் கூடாது. ஏனெனில் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் கூறி னார்கள்: யார் முழுக் குர்ஆனையும் மூன்று நாட்களுக்குக் குறைவாக ஓதிமுடிக்கின்றாரோ அவர் குர்ஆனை விளங்க வில்லை. அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ரு(ரழி) நூல்: திர்மிதி,நஸயீ
- ஓதும்போது பயபக்தியை மேற்கொள்ளவேண்டும்.
- அழகிய ராகத்துடன் ஓதவேண்டும். ஏனெனில் "திருக்குர் ஆனை அழகிய ராகத்துடன் ஓதுங்கள்" என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அல்பர்ராஉ பின் ஆஸிப்(ரழி) நூல்: அஹ்மத், இப்னுமாஜா

- தனக்கு முகஸ்துதி ஏற்பட்டுவிடும் என்றோ, தொழுது கொண்டிருப்பவருக்கு இடையூறாக இருக்கும் என்றோ அஞ்சினால் சப்தமில்லாமல் ஓத வேண்டும்.
- அதன் அர்த்தங்களையும் உட்கருத்துக்களையும் விளங்கி சிந்தித்து, மனதை ஒரு நிலைப்படுத்தி ஓத வேண்டும்.
- திருக்குர்ஆனை ஓதும்போது அலட்சியமாகவோ அதற்கு மாறுசெய்யும் விதமாகவோ நடந்துகொள்ளக் கூடாது. ஏனென்றால் இது சிலவேளை தன்னைத் தானே சபித்துக் கொள்வதற்குக் காரணமாக ஆகிவிடும். ஆம்! 'பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும் என்று பணிந்து இறைஞ்சுவோம்' (3:61) என்ற வசனத்தையோ அல்லது 'எச்சரிக்கை! அக்கிரமக்காரர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும்' (11:18) என்ற வசனத்தையோ ஓதும்போது தானே அந்நிலையில் இருந்தால் அவன் தன்னைத் தானே சபித்துக் கொள்ளக்கூடியவனாக ஆகிவிடுகின்றான்.
- குர்ஆனின்படி செயல்படுபவர்கள் ஆக முறச்சி செய்ய வேண்டும். அத்தகையோர்தான் அல்லாஹ்வுக்குரியவர்கள், அவனுக்கே உரித்தானவர்கள்.

## நபி(ஸல்)அவர்களுடன் நடந்து கொள்ளும் முறை

நபி(ஸல்)அவர்களுடன் ஒரு முழுமையான ஒழுங்குடன் நடந்து கொள்வது தன் கடமை என்பதை ஒரு முஸ்லிம் மனதார உணர்ந்து கொள்ளவேண்டும். இதற்குக் காரணம் இது தான்:

- இவ்வொழுங்கை அல்லாஹ்தான் மு∴மினான ஆண், பெண் அனைவர் மீதும் கடமையாக்கி இருக்கின்றான். அல்லாஹ் கூறுகிறான்: மு∴மின்களே! அல்லாஹ் மற்றும் அவன் தூதரின் முன்னிலையில் முந்தாதீர்கள். (49:1)

**“இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்கள் குரல்களை நபியின் குரலுக்கு மேல் உயர்த்தாதீர்கள். மேலும் ஒருவர் மற்றவரிடம் உரத்த குரலில் பேசிக்கொள்வதைப் போல் நபியிடம் உரத்த குரலில் பேசாதீர்கள். இதனால் நீங்கள் செய்த செயல்கள் வீணாகிவிடும்; நீங்கள் அதனை அறியாத நிலையில்! (49:2)**

- **அவர்களுக்குக் கட்டுப்படுவதையும் அவர்களை நேசிப்பதையும் அல்லாஹ்வே முஃமின்களுக்கு கடமையாக்கியுள்ளான்.**

**நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு கீழ்ப்படியுங்கள். அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். உங்கள் செயல்களை பாழாக்கிவிடாதீர்கள். (47:33)**

**இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுக்கிறாரோ அதை எடுத்துக்கொள்ளுங்கள். அவர் எதனை விட்டும் உங்களைத் தடுக்கிறாரோ அதனை விட்டு விலகி இருங்கள். (59:7)**

**(நபியே! மக்களிடம்) நீர் கூறுவீராக: நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாய் இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள் அல்லாஹ் உங்களை நேசிப்பான். மேலும் உங்கள் பாவங்களை மன்னிப்பான். அல்லாஹ் மன்னிப்பு வழங்குபவனும் பெருங்கருணையுடையவனுமாவான். (3:31)**

**தன்னுடைய தந்தை, தன்னுடைய பிள்ளை இன்னும் பிற மக்கள் யாவரையும் விட ஒருவருக்கு நான் மிகப் பிரியமானவராக ஆகாத வரை உங்களில் யாரும் நம்பிக்கை கொண்டவராக ஆக மாட்டார் என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.**

**நூல்: புகாரி, முஸ்லிம்**

என்றாலும் அவர்களுடன் நடந்து கொள்ள வேண்டிய ஒழுங்கு எப்படி இருக்க வேண்டும்? அது எந்த வகையில் அமைய வேண்டும்?

- அது, அவர்களுக்கு கீழ்ப்படிவதன் மூலமாக, மார்க்க மற்றும் உலகக் காரியங்கள் அனைத்திலும் அவர்களைப் பின்பற்றி நடப்பதன் மூலமாக அமைய வேண்டும்.
- அவர்களை நேசிப்பது, கண்ணியப்படுத்துவது, மதிப்பது ஆகியவற்றை விட வேறு யாருடைய நேசத்திற்கும் கண்ணியத்திற்கும் மதிப்பிற்கும் முன்னுரிமை வழங்கக் கூடாது.
- அவர்கள் நேசிக்கின்றவர்ளை இவனும் நேசிக்க வேண்டும். அவர்கள் பகைக்கின்றவர்களை இவனும் பகைக்க வேண்டும். மேலும் அவர்கள் எதை வீரும்புகின்றார்களோ அதை இவனும் வீரும்பவேண்டும். அவர்கள் எதை வெறுக்கின்றார்களோ அதை இவனும் வெறுக்கவேண்டும்.
- அவர்கள் கூறிய மார்க்க விஷயங்கள், உலகக் காரியங்கள் மற்றும் இம்மை, மறுமை பற்றிய மறைவான விஷயங்கள் ஆகியவற்றில் அவர்களை நம்பவேண்டும்.
- அவர்களைப் பற்றிக் கூறப்படும்போது அவர்களைக் கண்ணியப்படுத்தும் முகமாக அவர்கள் மீது ஸலாத்தும் ஸலாமும் சொல்ல வேண்டும்.
- அவர்களுடைய வழிமுறையை, மார்க்கத்தை நடைமுறைப் படுத்த வேண்டும். மேலும் அவர்களுடைய பிரச்சாரத்தை எடுத்துச் சொல்ல வேண்டும். அவர்களுடைய அறிவுரைகளை எடுத்து நடக்க வேண்டும்.

# மனதுடன் நடந்து கொள்ள வேண்டிய முறை

- ஒரு முஸ்லிம் இம்மை, மறுமையின் ஈடேற்றம் தன்னுடைய மனதைத் தூய்மைப்படுத்துவதில்- பண்படுத்துவதில்தான் இருக்கின்றது என்று நம்ப வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: மனதைத் தூய்மைப்படுத்திய வர் திண்ணமாக வெற்றியடைந்துவிட்டார். அதனை நசுக் கியவர் திண்ணமாகத் தோற்றுவிட்டார். (91:9,10)

காலத்தின் மீது சத்தியமாக மனிதன் உண்மையில் நஷ் டத்தில் இருக்கிறான். ஆனால் எவர்கள் இறைநம்பிக்கை கொண்டும் நற்செயல்கள் புரிந்து கொண்டும் மேலும் ஒரு வருக்கொருவர் சத்தியத்தை எடுத்துரைத்தும் பொறுமை யைக் கடைபிடிக்குமாறு அறிவுரை கூறிக்கொண்டும் இருந் தார்களோ அவர்களைத் தவிர! (103:1-3)

எனது சமுதாயத்தினர் அனைவருமே சுவர்க்கம் செல் வர்- நிராகரிப்பவரைத் தவிர! என நபி (ஸல்) அவர்கள் கூறி னார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதரே! நிராகரிப்பவர் என்றால் யார்? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், எனக்குக் கீழ்படிந்தவர் சுவர்க்கம் செல்வர். எனக்கு மாறு செய்தவர் நிராகரிப்பவராவார் என பதிலளித் தார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி

- மனதைத் தூய்மைப்படுத்தி, பண்படுத்தக்கூடியது ஈமான் தான் என்று நம்புவதைப் போல அதை மாசுபடுத்தி பாழ் படுத்தக்கூடியது நிராகரிப்பை மேற்கொள்வதும் பாவம் செய்வதும்தான் எனவும் நம்ப வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: பகலின் இரு ஓரங்களிலும் இரவு சிறிது கழிந்த நேரத்திலும் தொழுகையை நிலை நாட்டுவீ ராக! திண்ணமாக நன்மைகள் தீமைகளைக் கழைந்து

வீடுகின்றன. (11:14) மேலும் அல்லாஹ் கூறுகிறான்: அப்படி யல்ல! மாறாக உண்மை யாதெனில் அவர்களின் தீய செயல்களின் கறை அவர்களின் உள்ளங்களில் படிந்துவிட்டிருக்கின்றது. (83:14)

- இதனால்தான் முஸ்லிம் எப்போதும் தன் மனதைத் தூய்மைப்படுத்துவதிலும், பண்படுத்துவதிலும் ஈடுபடுவதோடு, நன்மை செய்வதற்கும் தீமையிலிருந்து விலகுவதற்கும் இராப்பகலாக அதனோடு போராடவும் வேண்டும். மேலும் ஒவ்வொரு நேரமும் சுய பரிசோதனை செய்து நற்செயல்கள் புரிவதற்கு மனதைத் தூண்ட வேண்டும். அதுபோல தீமைகளை விட்டும் மனதைத் திருப்பி, வழிபாட்டின் பால் செலுத்த வேண்டும். இதற்காக பின்வரும் வழிமுறைகளை கடைபிடிக்க வேண்டும்.

## 1. பாவமன்னிப்புத் தேடுதல்

அதாவது அனைத்துப் பாவங்களை விட்டும் தவறுகளை விட்டும் விலகி நடந்த தவறுகளுக்காக வருந்தி இனி மேல் மீண்டும் அதுபோன்ற பாவங்களைச் செய்யாமலிருக்க உறுதிகொள்ள வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்விடம் தூய்மையான பாவமன்னிப்பைக் கோருங்கள், இறைவன் உங்கள் பாவங்களைப் போக்கி சுவனச்சோலைகளில் உங்களை பிரவேசிக்கச் செய்வான் அவற்றின் கீழே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். (66:18)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் இரவில் தனது கையை நீட்டுகிறான் பகலில் பாவம் செய்தவர் மன்னிப்புக் கோருவதற்காக. பகலில் தனது கையை நீட்டுகிறான் இரவில் பாவம் செய்தவர் மன்னிப்புக் கேட்

பதற்காக. சூரியன் மேற்கிலிருந்து உதையமாகும் வரை இவ்வாறே செய்து கொண்டிருப்பான்.

அறிவிப்பவர்: அபூமூஸா (ரழி), நூல்: முஸ்லிம்

## 2. இறைவனின் கண்காணிப்பை மனதிற்கொள்ளுதல்

அதாவது வாழ்கையின் ஒவ்வொரு நொடியும் இறைவன் தன்னைக் கண்காணித்துக்கொண்டிருக்கின்றான் என்ற அடிப்படையில் செயல்பட வேண்டும். மேலும் நிச்சயமாக அல்லாஹ் தன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் தனது இரகசியங்களையும் பரகசியங்களையும் அறிந்துகொள் கின்றான் என்பதையும் அவன் அறிந்துகொள்ள வேண்டும்.

இதனால் அவனது உள்ளம் இறைவனின் கண்காணிப் பை உறுதிகொள்ளக்கூடியதாக, அவனை நினைவு கூறும் போது ஒரு பிரியத்தை உணரக்கூடியதாக, அவனுக்கு கட்டுப்பட்டு நடக்கும்போது ஒரு சுகத்தைப் பெற்றுக் கொள்ளக்கூடியதாக, அவனை விடுத்து ஏனைய அனைத் தையும் புறக்கணித்துவிட்டு அவன் பக்கமே திரும்பக்கூடிய தாக ஆகிவிடுகின்றது. பின்வரும் வசனங்களின் கருத்தும் இதுதான்.

எவர் அல்லாஹ்வுக்கு முற்றிலும் கட்டுப்பட்டு தனது நடத்தையையும் நல்லதாக்கிக் கொண்டு ஒரு மனப்பட்டு இப்ராஹீமின் வழிமுறையையும் பின்பற்றினாரோ அவரை விடச் சிறந்த வாழ்க்கை நெறியுடையவர் யார்? (4:125)

(நபியே!) நீர் எந்த நிலையிலிருந்தாலும் குர்ஆனிலிருந்து எதை நீர் ஓதிக் காண்பித்தாலும் (மக்களே!) நீங்களும் எச்செயலை செய்து கொண்டிருந்தாலும் அதை நீங்கள் செய்து கொண்டிருக்கும்போதே நாம் உங்களைப் பார்த் துக்கொண்டுதானிருக்கின்றோம். (10:61)

நீ அல்லாஹ்வை வணங்கும்போது அவனை நீ பார்த்துக் கொண்டிருப்பதுபோல வணங்க வேண்டும். அவனை நீ பார்க்க முடியாவிட்டாலும் அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: உமர் (ரழி), நூல்: முஸ்லிம்

## 3. சுய பரிசோதனை

முஸ்லிம் மறுமையில் தனக்கு நற்பேறு கிடைக்க வேண்டுமென்பதற்காகவும் அங்கு கிடைக்கும் நற்கூலிக்கும் இறைவனின் திருப்பொருத்தத்திற்கும் தன்னைத் தகுதியாக்கிக் கொள்வதற்காகவும் இவ்வுலகில்- அதுதான் அவன் செயல்படுவதற்குத் தகுந்த களம்- இரவு பகலாகச் செயல்படும்போது ஒரு வியாபாரியைப் போல செயல்பட வேண்டும்.

அதாவது தன்மீதுள்ள கடமையான வணக்கங்களை மூலதனமாகவும் நஃபிலான வணக்கங்களை மூலதனத்திற்கு மேல் கிடைக்கின்ற இலாபங்களாகவும் தவறுகளையும் பாவங்களையும் நஷ்டங்களாகவும் கருதி செயல்பட வேண்டும். பிறகு அவ்வப்போது தனியாக அமர்ந்து இன்றைய தினம் தாம் என்ன செய்தோம் என்று சுய பரிசோதனை செய்து பார்க்க வேண்டும்.

கடமைகளில் ஏதாவது குறை ஏற்பட்டிருந்தால் தன்னைத்தானே பழித்துக் கொண்டு உடனடியாக அக்குறையை நிவர்த்தி செய்ய வேண்டும். அக்குறை களாச் செய்யப்படக் கூடியதாக இருந்தால் அதைக் களாச்செய்து விட வேண்டும். களாச் செய்யப்படக்கூடியதாக இல்லையென்றால் நஃபில்களை அதிகமாகச் செய்து சரிசெய்து விட வேண்டும். நஃபில்களில் ஏதாவது குறை ஏற்பட்டிருந்தால் திரும்பவும் அந்த நஃபில்களைச் செய்து சரிசெய்து

விட வேண்டும். ஹராமான காரியங்களைச் செய்து நஷ்டம் ஏற்பட்டிருந்தால் அதற்காக வருந்தி இறைவனிடத்தில் பாவமன்னிப்புத் தேடி அவனிடமே திரும்பிவிட வேண்டும். அத்துடன் தான் செய்த தீமைக்குப் பொருத்தமான நன்மையைச் செய்து கொள்ள வேண்டும். சுய பரிசோதனையின் கருத்து இதுதான்.

அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். மேலும் ஒவ்வொரு மனிதனும் நாளைய தினத்திற்காக எதைத் தயார் செய்து வைத்திருக்கின்றான் என்று பார்க்கட்டும். அல்லாஹ்வுக்கு அஞ்சிய வண்ணம் இருங்கள். நீங்கள் செய்யும் செயல்கள் அனைத்தையும் நிச்சயமாக அல்லாஹ் அறிபவனாக இருக்கின்றான். (59:18)

உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் விசாரணை செய்யப்படுவதற்கு முன உங்களை நீங்களே விசாரணை செய்து கொள்ளுங்கள். (அஹ்மத்)

## 4. மனதோடு போராடுதல்

தன்னுடைய விரோதிகளிலேயே கொடிய விரோதி தனது மனம்தான் என்பதை முஸ்லிம் புரிந்துகொள்ள வேண்டும். இயல்பாகவே அது நன்மையை வெறுத்து தீமையை விரும்பக்கூடியதாகவும் தீயவற்றை அதிகம் தூண்டக்கூடியதாகவும் இருக்கின்றது. மேலும் மனம் எப்போதும் தனக்கு ஓய்வையும் சுகத்தையுமே விரும்பும். இச்சைகளின் மீதே மோகம் கொள்ளும். அவற்றில் தனக்குக் கெடுதியிருந்தாலும் சரியே!

இதை ஒரு முஸ்லிம் புரிந்து கொண்ட பிறகு நன்மைகளைச் செய்வதற்கும் தீமைகளைவிட்டு விலகுவதற்கும் தன் மனதோடு போராட வேண்டும்.

எவர்கள் நமக்காக போராடுகின்றார்களோ அவர்களுக்கு நாம் நம்முடைய வழிகளைக் காண்பிப்போம். திண்ணமாக அல்லாஹ் நன்மை செய்பவர்களுடன் இருக்கின்றான். (29:69)

இதுதான் நல்லோர்களின் வழிமுறையாகும். முஃமின்கள் மற்றும் வாய்மையாளர்களின் வழிமுறையும் இதுவே.

நபி(ஸல்)அவர்கள் இரவில் தம் கால்கள் வீங்கும் அளவுக்கு தொழுவார்கள். இதுபற்றி அவர்களிடம் கேட்கப்பட்டபோது நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?! எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா (ரழி)
நூல்: புகாரி, முஸ்லிம்

## பெற்றோருக்குரிய கடமைகள்

ஒரு முஸ்லிம் தன்மீதுள்ள பெற்றோருக்குரிய உரிமைகளையும் அவர்களுக்கு நன்மை செய்வது, கட்டுப்படுவது மற்றும் உபகாரம் செய்வதன் கடமையையும் நம்ப வேண்டும். இது அவன் இவ்வுலகில் தோன்றுவதற்கு அவர்கள் காரணமாக இருந்தார்கள் என்பதற்காகவோ அல்லது அவனுக்கு அவர்கள் செய்த நன்மைக்காக அவன் கைமாறு செய்யக் கடமைப்பட்டிருக்கிறான் என்பதற்காகவோ அல்ல. மாறாக அவர்களுக்கு கட்டுப்படுவதை அல்லாஹ் கடமையாக்கியிருக்கின்றான் என்பதற்காகத்தான்.

அல்லாஹ் கூறுகிறான்: அவனையன்றி வேறெவரையும் நீங்கள் வணங்கலாகாது என்றும் பெற்றோருக்கு நன்மை செய்ய வேண்டுமென்றும் உமதிறைவன் விதித்திருக்கிறான் (17:23)

பாவங்களில் மிகப்பெரும் பாவம் எது? என்பதை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? என நபி (ஸல்) அவர்கள் கேட்டபோது நபித்தோழர்கள் ஆம் என்றனர். உடனே நபி(ஸல்)

அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றோருக்கு மாறுசெய்வது, பொய் சாட்சி சொல்வது ஆகியவையாகும் என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அபூபக்ரா (ரழி), நூல்: புகாரீ, முஸ்லிம்

அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான செயல் எது? என்று நபி (ஸல்)அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கவர்கள் தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவதாகும் என பதிலளித்தார்கள். அதற்கடுத்தது எது? என்றேன். பெற்றோருக்கு நன்மை செய்வது என்றார்கள். அதற்கடுத்தது எது? என்று கேட்டேன். அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது என்றார்கள். அறிவிப்பவர்: இப்னு மஸ்ஊத் (ரலி) - புகாரீ, முஸ்லிம்

ஒரு மனிதர் நபி(ஸல்)அவர்களிடம் வந்து ஜிஹாத் செய்வதற்கு அனுமதி கேட்டார். அதற்கவர்கள் உன் பெற்றோர் உயிருடனிருக்கின்றார்களா? என்று கேட்டார்கள். அவர் 'ஆம்' என்றதும் அவர்களிடம் ஜிஹாத் (பணிவிடை) செய்வீராக! என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரழி)
நூல்: புகாரீ, முஸ்லிம்

முஸ்லிம் பெற்றோருக்குரிய இக்கடமைகளை ஏற்று அல்லாஹ்வுக்கு வழிப்படும் பொருட்டும் அவனது அறிவுரைகளை நடைமுறைப்படுத்தும் பொருட்டும்- அதனை முழுமையாக நிறைவேற்றும்போது அவர்கள் விஷயத்தில் பின்வரும் ஒழுக்கங்களைக் கடைபிடிக்க வேண்டும்.

- ❑ அல்லாஹ்வுக்கு மாறு செய்யாத, அவனது ஷரீஅத்திற்கு முரணில்லாத விஷயங்களில் பெற்றோர் ஏவுகின்ற, விலக்குகின்ற அனைத்து விஷயங்களிலும் அவர்களுக்குக் கட்டுப்பட வேண்டும். ஏனெனில் படைத்தவனுக்கு மாறு செய்யும் விஷயத்தில் எந்தப் படைப்புக்கும் கட்டுப்படுதல் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: எதனை நீ அறியமாட்டாயோ அதனை என்னோடு நீ இணைகற்பிக்க வேண்டுமென்று அவர்கள் இருவரும் உன்னை நிர்ப்பந்தித்தால் அவர்களுக்கு நீ ஒருபோதும் கட்டுப்படவேண்டாம். (31:15)

நபி(ஸல்)கூறினார்கள்: படைத்தவனுக்கு மாறு செய்யும் விஷயத்தில் எந்தப் படைப்புக்கும் கட்டுப்படுதல் கூடாது.
நூல்: அஹ்மத், தப்ரானி

- அவர்களைக் கண்ணியப்படுத்த வேண்டும். அவர்களிடத்தில் ஒழுக்கமாக நடந்து கொள்ள வேண்டும். இன்னும் அவர்களிடம் கனிவுடனும் கருணையுடனும் நடந்துகொள்ளல் வேண்டும். சொல்லாலும் செயாலாலும் அவர்களிடம் கண்ணியமாக நடந்துகொள்ள வேண்டும். தனது குரலை அவர்களின் குரலுக்கு மேல் உயர்த்தக் கூடாது.

அவர்களுக்கு முன்னால் நடக்கவும் கூடாது. அவர்களை விட தன் மனைவிக்கோ பிள்ளைகளுக்கோ முன்னுரிமை வழங்கக் கூடாது. அவர்களின் அனுமதியும் திருப்தியுமின்றி பயணம் மேற்கொள்ளக் கூடாது.

- அவர்களுக்கு உணவும் உடையும் கொடுப்பது, அவர்களுக்கு மருத்துவம் செய்வது, துன்பங்கள் தொல்லைகள் நேராமல் பார்த்துக்கொள்வது, தன்னையே அவர்களுக்காக அர்ப்பணிப்பது போன்ற பல்வேறு நன்மைகளையும் நல்லுபகாரங்களையும் தன்னால் இயன்ற அளவு அவர்களுக்கு செய்ய வேண்டும்.

- அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்யவேண்டும், பாவமன்னிப்புத் தேட வேண்டும். இன்னும் அவர்களின் நண்பர்களைக் கண்ணியப்படுத்த வேண்டும்.

## பிள்ளைகளுக்குரிய கடமைகள்

ஒரு தந்தைக்கு தன் பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன என்பதையும் ஒரு முஸ்லிம் ஏற்றுக் கொள்ள வேண்டும். இது அந்த குழந்தையின் தாயை அவர் தேர்ந்தெடுப்பதில் இருந்து அக்குழந்தைக்கு அழகிய பெயர் சூட்டுவது, குழந்தை பிறந்த ஏழாம் நாளில் அகீகா கொடுப் பது, கத்னா செய்வது, அவர்களிடம் அன்பு செலுத்துவது, மென்மையாக நடந்து கொள்வது, அவர்களுக்குச் செலவு செய்வது, சிறந்த ஒழுக்கப் பயிற்சி அளிப்பது, அவர்களைப் பண்படுத்துவது, பக்குவப்படுத்துவது, அவர்களுக்கு மார்க் கக் கல்வியைக் கற்றுக் கொடுப்பது, ஃபர்லுகளையும் சுன்னத் துகளையும் இஸ்லாமிய ஒழுக்கங்களையும் நிறைவேற்றுவ தற்குப் பயிற்சி கொடுப்பது வரை அனைத்தும் அடங்கும்.

அவர்களுக்குத் திருமணமாகின்ற வரை இவ்வனைத்தும் தந்தையின் கடமையாகும். அவர்களுக்குத் திருமணம் ஆகி விட்டால் அவர்களை அவர்கள் இஷ்டத்திற்கு விட்டு விட வேண்டும். விரும்பினால் அவர்கள் தந்தையின் பராமரிப்பில் இருக்கலாம் அல்லது தனியாகச் சென்று விடலாம்.

இதற்கான ஆதாரங்கள் வருமாறு: தம் குழந்தைகளுக்குப் பால் குடியைப் பூர்த்தியாக்கவேண்டும் என்று தந்தையர்களில் யாராவது விரும்பினால் தாய்மார்கள் தங்களின் குழந்தை க ளுக்கு இரண்டாண்டு காலம் முழுமையாகப் பாலூட்ட வேண் டும். இந்நிலையில் அத்தாய்மார்களுக்கு நல்லமுறையில் உண வளிப்பதும் உடையளிப்பதும் குழந்தைகளின் தந்தையர்க் குரிய பொறுப்பாகும். (2:233)

இறைநம்பிக்கை கொண்டவர்களே! மனிதர்களும் கற்க ளும் எரிபொருள்களாகக்கூடிய அந்த நரக நெருப்பிலிருந்து உங்களையும் உங்கள் மனைவி மக்களையும் பாதுகாத்துக்

கொள்ளுங்கள். (66:6) வறுமைக்கு அஞ்சி உங்கள் பிள்ளை களை கொலை செய்யாதீர்! நாம்தாம் அவர்களுக்கும் உண வளிக்கிறோம் உங்களுக்கும் உணவளிக்கிறோம். (17:31)

நபி(ஸல்)கூறினார்கள்: ஒவ்வொரு குழந்தையும் அகீகா வுக்குப் பொருப்பாக்கப்பட்டுள்ளது. அதன் சரர்பில் ஏழாம் நாள் அகீகா கொடுத்து, பெயர் சூட்ட வேண்டும்; தலை முடி யை மழித்துவிட வேண்டும். அறிவிப்பவர்: ஸமுரா (ரழி)

நூல்: திர்மதி, இப்னு மாஜா

குழந்தைகளுக்கு அன்பளிப்பு வழங்கும்போது அவர்ளிடம் சமமாக நடந்துகொள்ளுங்கள் என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: பைஹகி, தப்ரானி

உங்கள் குழந்தைகள் ஏழு வயதை அடையும்போது அவர் களை தொழும்படி ஏவுங்கள். பத்து வயதை அடைந்ததும் தொழாமலிருந்தால் அவர்களை அடியுங்கள். படுக்கைகளில் அவர்களைப் பிரித்துவைய்யுங்கள் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரழி)

நூல்: அபூதாவூத், தப்ரானி

## சகோதரர்களிடம் நடந்து கொள்வது

ஒரு முஸ்லிம் தன் தந்தையிடமும் பிள்ளையிடமும் நடந்து கொள்ள வேண்டிய அதே ஒழுங்கோடு தன் சகோதரர்களிட மும் நடந்து கொள்ள வேண்டும். இது விஷயத்தில் அவர்கள் அனைவரும் சமம் என்று கருத வேண்டும். எனவே இளைய சகோதரர்கள் தம் மூத்த சகோதரர்களிடம் தம் தந்தையிடம் நடந்து கொள்வதைப் போலவே நடந்து கொள்ள வேண்டும். மூத்த சகோதரர்கள் தம் இளைய சகோதரர்களிடம் தம் தந் தையின் பிள்ளைகளிடம் நடந்து கொள்வதைப் போலவே நடந்து கொள்ள வேண்டும். அவர்களுக்குரிய உரிமைகள்,

கடமைகள், ஒழுக்கங்கள் ஆகிய எல்லா விஷயத்திலும் இவ் வாறே நடந்து கொள்ள வேண்டும். ஆதாரம்:

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: உன் தாய் பிறகு உன் தந்தை பிறகு உனது சகோதரி பிறகு உனது சகோதரர் ஆகி யோரிடத்திலும் பிறகு அடுத்தடுத்து வரக்கூடிய உன் நெருங் கிய உறவினரிடத்திலும் நீ நல்ல முறையில் நடந்து கொள். நூல்: பஸ்ஸார், தைலமி (இந்த ஹதீஸ் பலவீனமானது)

## கணவன், மனைவி இடையே உள்ள உரிமைகள்

கணவன், மனைவி இடையேயும் பரஸ்பரம் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் உள்ளன என்பதை ஒரு முஸ்லிம் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவை அவர்கள் ஒவ்வொருக்கும் மற்றவரின் மீதுள்ள உரிமைகளாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: மனைவியர் மீது கணவர்களுக் குள்ள உரிமைகள்போல முறைப்படி கணவர்கள் மீது மனை வியருக்கும் உரிமைகள் உள்ளன. ஆயினும் ஆண்களுக்குப் பெண்களைவிட ஒருபடி உயர்வு உண்டு. (2:228)

இவ்வசனம் கணவன், மனைவி இருவருக்குமே பரஸ்பரம் உரிமைகள் இருப்பதை உறுதி செய்வதோடு பல்வேறு கார ணங்களால் ஆணுக்கு அதிகப்படியான அந்தஸ்து இருப்பதா கவும் கூறுகின்றது.

நபி(ஸல்)அவர்கள் தமது இறுதி ஹஜ்ஜின்போது கூறினார் கள்: ...அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக உங்கள் மனை வியர் மீது உங்களுக்கு உரிமைகள் கடமைகள் இருக்கின் றன. உங்கள் மீது உங்கள் மனைவியருக்கும் உரிமைகள் கடமைகள் இருக்கின்றன...அறிவிப்பவர்: அம்ர் பின் அல் அஹ்வஸ் (ரழி), நூல்: திர்மதி, அபூதாவூத்

ஆயினும் இந்த உரிமைகள் கடமைகளில் சில கணவன், மனைவி இருவருக்கும் பொதுவானவையாகவும் சில தனிப்பட்டதாகவும் இருக்கின்றன.

1. நம்பிக்கை: கணவன், மனைவியர் ஒவ்வொருவரும் பரஸ்பரம் நம்பிக்கைக்கு பாத்திரமாக நடந்து கொள்வது கடமையாகும். சிறிதும் துரோகம் செய்யக் கூடாது.

2. அன்பு, பாசம்: அவர்கள் ஒவ்வொருவரும் பரஸ்பரம் மிக அதிக அளவில் தூய்மையான அன்புடனும் பரிபூரணமான பாசத்துடனும் நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் இருவரும் இறைவன் கூற்றை உறுதிப்படுத்தும் விதத்தில் காலம் முழுவதும் பரஸ்பரம் இத்தகைய அன்புடனும் பாசத்துடனும் நடந்து கொள்ள வேண்டும்.

   இறைவன் கூறுகிறான்: அவனுடைய சான்றுகளில் இதுவும் ஒன்றாகும். அவன் உங்களுக்காக உங்கள் இனத்திலிருந்தே மனைவியரைப் படைத்தான், நீங்கள் அவர்களிடம் அமைதி பெறவேண்டும் என்பதற்காக. மேலும் உங்களிடம் அன்பையும் கருணையையும் தோற்றுவித்தான். திண்ணமாக சிந்திக்கும் மக்களுக்கு இதில் நிறைய சான்றுகள் உள்ளன. (30:21)

   அன்பு செலுத்தாதவர், அன்பு செலுத்தப்பட மாட்டார் என்பது நபிமொழி. அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி)
   நூல்: புகாரி, முஸ்லிம்

3. பரஸ்பர விசுவாசம்: அவர்கள் பரஸ்பரம் விசுவாசமாக நடந்து கொள்ள வேண்டும். தம் நம்பிக்கை, நன்நடத்தை, வாய்மை ஆகியவற்றில் சிறு சந்தேகமும் ஏற்பட்டுவிடக் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கையாளர்கள் ஒரு வர் மற்றவருக்கு சகோதரர் ஆவார். (49:9)

நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்: தனக்கு விரும்பு வதையே தனது சகோதரருக்கும் விரும்பாதவரை உங்க ளில் யாரும் இறைநம்பிக்கை கொண்டவராக மாட்டார். அறிவிப்பவர்: அனஸ் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

ஆம்! கணவன், மனைவிய பந்தம் ஈமானிய சகோதரத் துவத்திற்கு உறுதியையும் செம்மையையும் அதிகப்படுத்து கின்றது.

4. பொதுவான ஒழுங்குகள்: உதாரணமாக நடைமுறை பழக்க வழக்கங்களில் மென்மையான போக்கை மேற்கொள்வது, ஒருவரையொருவர் மலர்ந்த முகத்துடன் பார்ப்பது, மதிப் பது, கண்ணியத்துடனும் மரியாதையுடனும் நடந்து கொள் வது.

இவையனைத்தும் திருக்குர்ஆனில் இறைவன் கட்ட ளையிட்டிருக்கின்ற குடும்பவாழ்க்கையின் சிறந்த ஒழுக் கங்களாகும். நபி(ஸல்)அவர்கள் ஏவியிருக்கின்ற நன்நடத் தைகளாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: அவர்களுடன் நல்ல முறையில் வாழ்க்கை நடத்துங்கள். (4:19)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: பெண்களை நல்ல முறையில் நடத்துங்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி) நூல்: புகாரி, முஸ்லிம்

## தனிப்பட்ட உரிமைகள், ஒழுக்கங்கள்

அதாவது கணவன் மீது மனைவிக்கும் மனைவியின் மீது கணவனுக்கும் தனிப்பட்ட உரிமைகளும் கடமைகளும் இருக்கின்றன. அவை வருமாறு:

# கணவன் மீது மனைவிக்குரிய கடமைகள்

மனைவி விஷயத்தில் கணவன் பின்வரும் ஒழுக்கங்களை மேற்கொள்வது கடமையாகும்.

1. அவளுடன் நல்லமுறையில் வாழ்க்கை நடத்தவேண்டும். "அவர்களோடு நல்லமுறையில் வாழ்க்கை நடத்துங்கள்" என்று அல்லாஹ் கூறுகிறான். (4:19)

அவன் உண்ணும்போது அவளுக்கும் உண்ணக் கொடுக்க வேண்டும். அவன் ஆடை அணியும்போது அவளுக்கும் அணியக் கொடுக்க வேண்டும். தனக்கு அவள் மாறு செய்துவிடுவாளோ என்று அவன் அஞ்சினால் அவளை எவ்வாறு பக்குவப்படுத்த வேண்டுமென்று அல்லாஹ் கட்டளையிட்டுள்ளானோ அவ்வாறு அவளை பக்குவப்படுத்த வேண்டும்.

முதலில் அவளைத் திட்டாமல், ஏசாமல், கேவலப்படுத்தாமல் அவளுக்கு அறிவுரை கூறவேண்டும். அதற்கவள் கட்டுப்படவில்லையென்றால் படுக்கையிலிருந்து அவளை ஒதுக்கி வைக்க வேண்டும். அதற்கும் கட்டுப்படவில்லையென்றால் காயம் ஏற்படாதவாறு அவளை அடிக்க வேண்டும். முகத்தில் அடிக்கக்கூடாது. அடிக்கும்போது இரத்தம் வந்து விடக் கூடாது. அவையங்களுக்குக் கேடும் வந்து அவை செயல்பாடுகளை இழந்துவிடக் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: எந்தப் பெண்கள் குறித்து அவர்கள் (தம் கணவருக்கு) மாறு செய்வார்கள் என்று நீங்கள் அஞ்சுகின்றீர்களோ அந்தப் பெண்களுக்கு நல்லறிவு புகட்டுங்கள், படுக்கைகளிலிருந்து அவர்களை ஒதுக்கி வையுங்கள், மேலும் அவர்களை அடியுங்கள், ஆனால் அவர்கள் உங்களுக்குக் கீழ்படிந்து விட்டால் பிறகு அவர்களுக்கு எதிராக வேறு வழியைத் தேடாதீர்கள். (4:34)

எங்கள் மீது எங்கள் மனைவிக்குரிய கடமை என்ன? என்று நான் நபி(ஸல்)அவர்களிடம் கேட்டபோது, நீ உண்ணும்போது அவளுக்கும் உண்ணக் கொடு. நீ ஆடை அணியும்போது அவளுக்கும் அணியக்கொடு. அவளை முகத்தில் அடிக்காதே. அவளை கேவலமாகப் பேசாதே. அவளை வெறுப்பதாக இருந்தால் வீட்டிலேயே வெறுத்துக் கொள் என்று அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: முஆவியா பின் ஹைதா (ரழி), நூல்: அபூதாவூத்

அறிந்து கொள்ளுங்கள்! உங்கள் மீது உங்கள் மனைவியருக்குரிய கடமைகள் அவர்களுக்கு நீங்கள் அழகிய முறையில் உணவளிப்பதும் உடையளிப்பதுமே! என்பது நபிமொழி. அறிவிப்பவர்: அம்ர் பின் அஹ்வஸ் (ரழி), - திர்மிதி

ஒரு முஃமினான ஆண் முஃமினான தன் மனைவியை வெறுத்துவிட வேண்டாம். அவளது ஒரு குணத்தை அவன் வெறுத்தால் அவன் விரும்பக்கூடிய வேறு குணத்தை அவளிடம் அவன் காணலாம் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

2. அவளுக்கு அத்தியாவசியமான மார்க்க விஷயங்களை அவன் கற்றுக் கொடுக்க வேண்டும்-அவற்றை அவள் தெரியாமலிருந்தால். அவற்றைக் கற்றுக்கொள்வதற்காக நற்போதனை நடக்கின்ற கூட்டங்களில் கலந்து கொள்வதற்கு அவளை அனுமதிக்க வேண்டும். ஏனெனில் உண்பதற்கும் பருகுவதற்குமுரிய தேவையை விட மார்க்கத்தை அறிந்து கொள்வதற்கான தேவை குறைந்ததல்லவே!

அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கை கொண்டவர்களே! மனிதர்களும் கற்களும் எரிபொருள்களாகக்கூடிய அந்த நரக நெருப்பிலிருந்து உங்களையும் உங்கள் மனைவி, மக்களையும் காத்துக் கொள்ளுங்கள். (66:6)

3. இஸ்லாமிய நற்போதனைகளை அவள் நடைமுறைப்படுத்த வலியுறுத்த வேண்டும். அழகையும் அலங்காரத்தையும் காட்டிக்கொண்டு செல்வது, அந்நிய ஆண்களுடன் கலந்திருப்பது போன்றவற்றை வீட்டும் அவளை அவன் தடுக்க வேண்டும். காரணம் ஆண்தான் பொறுப்பாளன்; சட்டப்படி அவளைப் பாதுகாக்கக் கடமைப்பட்டவன்.

"ஆண்களே பெண்களை நிர்வகிப்போர் ஆவர்."(4:34) "...ஒரு ஆண் தனது குடும்பத்தார்களுக்குப் பொறுப்பாவான். அவன் தனது பொறுப்பு பற்றி விசாரிக்கப்படுவான்" என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

## மனைவி மீது கணவனுக்குரிய கடமைகள்

கணவன் விஷயத்தில் பின்வரும் ஒழுக்கங்களையும் மேற்கொள்வது மனைவியின் மீது கடமையாகும்.

1. பாவமல்லாத காரியங்களில் அவனுக்கு அவள் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்.

"அவர்கள் (மனைவியர்) உங்களுக்குக் கட்டுப்பட்டுவிட்டால் பிறகு அவர்களுக் எதிராக வேறு வழியைத் தேடாதீர்கள். (4:34)

ஒருவர் தன் மனைவியை படுக்கைக்கு அழைத்து அவள் செல்லவில்லையென்றால் அவன் அவள் மீது கோபம் கொண்டவனாக அன்றிரவைக் கழித்தால் காலையில் அவள் விழிக்கும் வரை வானவர்கள் அவளை சபிக்கின்றார்கள் என நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

ஒருவர் மற்றவரின் காலில் விழுவதற்கு நான் அனுமதிப்பதாக இருந்தால் கணவனின் காலில் மனைவி விழுவதற்கு

அனுமதித்திருப்பேன் என்றும் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

2. அவள் தனது கண்ணியத்தையும் தன் கணவனது மான மரியாதையையும் பாதுகாப்பதோடு கணவனது பொருள் அவனது பிள்ளைகள் மற்றும் வீட்டிலுள்ள அனைத்துக் காரியங்களையும் பேணிக் காத்துக் கொள்ள வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: ஒழுக்கமான பெண்கள் (தம் கணவன்மார்களுக்குக்) கீழ்படிந்தே நடப்பார்கள். மேலும் தம் கணவன்மார்கள் வீட்டில் இல்லாத காலங்களில் பாது காக்கப்பட வேண்டியவற்றை அல்லாஹ்வின் பாதுகாவல் கொண்டு பேணிக் காத்து வருவார்கள். (4:34)

ஒரு பெண் தன் கணவன் வீட்டிற்குப் பொறுப்பாவாள். அவள் தனது பொறுப்பு பற்றி விசாரிக்கப்படுவாள் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்.

3. கணவனின் வீட்டிற்குள்ளேயே அவள் இருக்க வேண்டும். அவனது அனுமதியும் திருப்தியும் இல்லாமல் வீட்டைவிட்டு வெளியேறக்கூடாது. தன் பார்வையைத் தாழ்த்திக்கொள்வதுடன் தன் குரலையும் தாழ்த்திக் கொள்ள வேண்டும். மேலும் யாருக்கும் அவள் கெடுதி இழைக்கக் கூடாது. கணவனின் உறவினர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: உங்கள் வீடுகளிலேயே தங்கியிருங்கள். முந்தைய அஞ்ஞான காலத்தைப் போன்று ஒப்பனையையும் ஒய்யாரத்தையும் காட்டிக் கொண்டு வெளியே திரியாதீர்கள். (33:33) மேலும் கூறுகிறான்: மென்மையாகப் பேசாதீர்கள். ஏனெனில் உள்ளத்தில் கெட்ட எண்ணம் கொண்டிருப்பவன் சபலம் கொள்ளக் கூடும். (33:32)

தீய சொற்களை வெளிப்படையாகப் பேசுவதை அல்லாஹ் விரும்புவதில்லை. (4:148)

(நபியே!)ஈமான் கொண்ட பெண்களிடம் கூறும்: அவர்கள் தம் பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளட்டும். தம் வெட்கத்தலங்களைப் பாதுகாக்கட்டும்.தம் அழகை வெளியில் காட்டாதிருக்கட்டும். அதிலிருந்து தாமாக வெளியே தெரிகின்றவற்றைத் தவிர. (24:31)

எந்தப் பெண் தன் கணவன் தன்னைப் பார்க்கும்போது மகிழ்விப்பாளோ, அவன் கட்டளையிட்டால் அவனக்குக் கீழ்படிந்து நடப்பாளோ, அவன் இல்லாத காலங்களில் தனது கற்பையும் தனது பொருளையும் பாதுகாத்துக் கொள்வாளோ அத்தகையவளே பெண்களில் சிறந்தவள் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்:நஸயீ,

## உறவினர்களுடன் நடந்து கொள்வது

ஒரு முஸ்லிம் தன் பெற்றோர், பிள்ளைகள், சகோதரர்கள் ஆகியோரிடம் எப்படி நடந்து கொள்வானோ அதுபோன்றே தனது இரத்த பந்தமுடையவர்களுடனும் உறவினர்களுடனும் நடந்து கொள்ள வேண்டும்.

தன் பெற்றோரிடம் நடந்து கொள்வது போலவே தன் பெற்றோரின் சகோதர, சகோதரிகளுடன் நடந்து கொள்ள வேண்டும். அதாவது தன் தாயின் சகோதரிகளுடனும் தந்தையின் சகோதரிகளுடனும் தாயிடம் நடந்து கொள்வது போலவே நடந்து கொள்ள வேண்டும். தன் தந்தையின் சகோதரர்களுடனும் தாயின் சகோதரர்களுடனும் தந்தையிடம் நடந்து கொள்வது போலவே நடந்து கொள்ள வேண்டும்.

இரத்த பந்தமுடையவர்கள் மு..மின்களாக இருந்தாலும் கா..பிர்களாக இருந்தாலும் அவர்கள் அனைவரையும் இரத்த பந்தமுடையவர்களாகவே கருத வேண்டும். அவர்களுடன் இணைந்து வாழ்வதும் அவர்களுக்கு நன்மையும் நல்லுபகார மும் செய்வதும் கடமையாகும்.

அவர்களில் பெரியவர்களைக் கண்ணியப்படுத்தவேண்டும். சிறியவர்களிடம் அன்பு காட்ட வேண்டும். அவர்கள் நோயுற் றால் அவர்களை நோய் விசாரிக்கச் செல்ல வேண்டும். அவர் கள் கஷ்டப்படும்போது அவர்களை ஆதரிக்க வேண்டும் அவர் களுக்குத் துன்பம் ஏற்பட்டால் ஆறுதல் சொல்ல வேண்டும். அவர்கள் உறவை முறித்தாலும் அவர்களுடன் இணைந்து வாழ வேண்டும். அவர்கள் கடினமாக நடந்து கொண்டாலும் அவன் அவர்களிடம் மென்மையாக நடந்து கொள்ள வேண் டும். இவையனைத்தும் திருக்குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் வலியுறுத்தப்பட்டிருக்கின்றன.

அல்லாஹ் கூறுகிறான்: எந்த அல்லாஹ்வின் பெயரைக் கூறி நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கோருகின் றீர்களோ அந்த அல்லாஹ்வுக்கே நீங்கள் அஞ்சுங்கள். மேலும் இரத்தபந்த உறவுகளைச் சீர்குலைப்பதிலிருந்து நீங்கள் விலகிவாழுங்கள். (4:1)

உறவினர்க்கு அவருடைய உரிமையை வழங்கிவிடு (30:38) நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்தும்படியும் நன்மை செய் யும்படியும் உறவினர்களுக்கு ஈந்துதவும்படியும் கட்டளையிடு கின்றான். (16:90)

அல்லாஹ்வின் தூதரே! என்னை சொர்க்கத்தில் சேர்த்து, நரகத்தைவிட்டும் தூரப்படுத்தக்கூடிய ஒரு செயலை எனக்கு அறிவித்துத் தாருங்கள் என நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் கேட்டபோது, ' நீ அல்லாஹ்வை வணங்கு. அவனுக்கு இணை

எதையும் கற்பிக்காதே. தொழுகையை நிலைநாட்டு. ஸகாத் கொடு. உறவினர்களுடன் இணைந்து வாழு' என்று பதிலளித் தார்கள். அறிவிப்பவர்: அபூஅய்யூப் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

அபூபக்கருடைய மகள் அஸ்மா (ரழி) அவர்களின் தாயார் இணைவைப்பவராக இருக்கின்ற நிலையில் மக்காவிலிருந்து (மதீனாவுக்கு) வந்திருந்தபோது என் தாயாரிடம் நான் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டுமா? என்று நபி (ஸல்) அவர்களிடம் அஸ்மா (ரழி) கேட்டபோது, ஆம்! உன் தாயாரிடம் நல்ல முறையில் நடந்து கொள் என அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அஸ்மா (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

## அண்டை வீட்டாருடன் நடந்து கொள்வது

அண்டை வீட்டாருக்குரிய உரிமைகளையும் ஒழுக்கங்க ளையும் ஒரு முஸ்லிம் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவற்றை முழுமையாகப் பேணி நடப்பது ஒவ்வொரு அண்டை வீட்டா ரின் மீதும் கடமையாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். தாய், தந்தையரி டம் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். மேலும் உறவி னர்கள், அநாதைகள், வறியவர்கள், உறவினரான அண்டை வீட்டார், அந்நியரான அண்டை வீட்டார் ஆகியோருடனும் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். (4:36)

அண்டை வீட்டாரை எனது வாரிசாக அறிவித்து விடுவா ரோ என்று நான் எண்ணுமளவிற்கு அண்டை வீட்டார் பற்றி ஜிப்ரீல் (அலை) என்னிடம் அறிவுறுத்திக்கொண்டே இருந்தார் கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

அல்லாஹ்வையும் மறுமையையும் நம்பிக்கை கொண்டவர் தன் அண்டை வீட்டாரிடம் கண்ணியமாக நடந்து கொள்ளட்டும் எனவும் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஷுரைஹ் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

## அண்டை வீட்டாரின் கடமைகள்

1. சொல்லால், செயலால் அவருக்கு தொல்லை தராமலிருப்பது. 'அல்லாஹ்வையும் மறுமையையும் நம்பிக்கை கொண்டவர் தன் அண்டை வீட்டாரிடம் கண்ணியமாக நடந்து கொள்ளட்டும்' என்று நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அபூஷுரைஹ் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

   அவன் முஃமினல்லன்! அவன் முஃமினல்லன்! என நபி (ஸல்)அவர்கள் மூன்று முறை கூறியபோது, 'அல்லாஹ்வின் தூதரே! யார் அவன்? எனக் கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்)அவர்கள், 'எவனுடைய தொல்லைகளிலிருந்து அண்டை வீட்டார் பாதுகாப்பாக இல்லையோ அவனே!' எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), புகாரி

2. அவருக்கு நல்லுபகாரம் செய்வது. அதாவது அவருக்கு உதவி தேவைப்பட்டால் உதவி செய்வது, ஒத்துழைப்பு தேவைப்பட்டால் ஒத்துழைப்பது, நோயுற்றால் நோய் விசாரிக்கச் செல்வது, சந்தோஷம் ஏற்பட்டால் வாழ்த்துவது, துன்பம் ஏற்பட்டால் ஆறுதல் சொல்வது, தேவை ஏற்பட்டால் உதவுவது, அவருக்கு முந்திக்கொண்டு ஸலாம் சொல்வது, அவரிடமும் அவரின் குழந்தைகளிடமும் மென்மையாகப் பேசுவது, அவருடைய இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை பயக்கும் விஷயங்களில் அவருக்கு வழிகாட்டுவது, அவருடைய தவறுகளை மன்னிப்பது, அவருடைய அந்தரங்கங்களைத் துரவிப் பார்க்காமல் இருப்பது, அவர்

வீடு கட்டுவதில் அல்லது பாதை அமைப்பதில் அவருக்கு நெருக்கடி கொடுக்காமலிருப்பது, அவருடைய வீட்டுக்கு முன்னால் குப்பைகளைப் போடுவதன் மூலம் தொந்தரவு கொடுக்காமலிருப்பது. இவையனைத்தும் நமக்கு ஏவப் பட்ட நல்லுபகாரங்களாகும்.

3. நன்மை செய்வதன் மூலம் அவரைக் கண்ணியப்படுத்து வது. 'முஸ்லிம் பெண்களே! அண்டை வீட்டாருக்குக் கொ டுக்கும் பொருள் அற்பமாக இருப்பதாக நினைத்து கொ டுக்காமலிருக்க வேண்டாம். சிறிதளவு இறைச்சி ஒட்டிக் கொண்டிருக்கும் எலும்புத் துண்டாயினும் சரியே! என நபி (ஸல்) கூறினர். அறிவிப்பவர்: அபூதர் (ரழி) புகாரி, முஸ்லிம்

அபூதரே! நீ குழம்பு சமைத்தால் அதில் தண்ணீரை அதிகப்படுத்தி உன் அண்டைவீட்டாரையும் கவனித்துக் கொள் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

அல்லாஹ்வின் தூதரே! எனக்கு இரு அண்டை வீட்டார் உள்ளனர். நான் யாருக்கு முதலில் அன்பளிப்பு கொடுக்க வேண்டும்? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்)அவர்கள் யாருடைய வீட்டு வாசல் உனக்கு மிக அருகிலுள்ளதோ அவருக்குக் கொடு என விடையளித்தார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரழி), நூல்: புகாரி.

4. அவரை மதிப்பது, கண்ணியப்படுத்துவது தன் எல்லைச் சுவரில் ஒரு குச்சியை நடுவதைக் கூட தடுக்காமலிருப் பது. அவருடைய இடத்துடன் சேர்ந்திருக்கிற இடத்தை வாடகைக்கு விடுவதாக இருந்தால் அல்லது விற்பதாக இருந்தால் அவரிடம் ஆலோசிக்காமல், தெரிவிக்காமல் செய்யக் கூடாது.

ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: அண்டை வீட்டுக்காரர் உங்கள் (எல்லைச்) சுவரில் மரக்குச்சியை

நடுவதை யாரும் ஆட்சேபிக்க வேண்டாம். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரீ, முஸ்லிம்

ஒருவரின் தோட்டத்திற்கு பங்குதாரரோ அல்லது அண்டை வீட்டாரரோ இருந்தால் அவரிடம் தெரிவிக்காமல் அவர் அதை விற்க வேண்டாம். நபிமொழி (ஹாகிம்)

## முஸ்லிமுக்குரிய கடமைகள்

ஒரு முஸ்லிம் தன் சகோதர முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் ஒழுக்கங்களையும் நம்ப வேண்டும். இதனை அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய வணக்கமாகவும் அவனை நெருங்குவதற்குரிய வழியாகவும் கருதி முறையாக நிறைவேற்ற வேண்டும். காரணம் இவற்றைப் பேணி நடக்குமாறு அல்லாஹ் கடமையாக்கியிருக்கிறான். அவை வருமாறு:

1. அவனைச் சந்தித்தால் பேச்சைத் தொடங்கும் முன் அவனுக்கு ஸலாம் சொல்ல வேண்டும். அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு என்று கூறி அவனிடம் முஸா∴பஹா- கைலாகு செய்ய வேண்டும். இதற்கவன் வஅலைக்கும் ஸலாம் வரஹ்மத்துல்லாஹி வபரகாதுஹு என்று பதில் கூற வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: உங்களுக்கு (ஸலாம்) எனும் வாழ்த்துக் கூறப்பட்டால் அதை விட அழகிய முறையில் அல்லது (குறைந் தபட்சம்) அதைப் போன்றாவது பதில் வாழ்த்துக் கூறுங்கள். (4:86)

நபீ (ஸல்) கூறினார்கள்: வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கும் நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும் சிறிய கூட்டம் பெருங்கூட்டத்திற்கும் ஸலாம் சொல்ல வேண்டும். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி) -புகாரீ, முஸ்லிம்

அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் நீ ஸலாம் சொல் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரழி), நூல்: புகாரீ, முஸ்லிம்

2. அவன் தும்மி اَلْحَمْدُ لِلّٰهِ அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று கூறினால் يَرْحَمُكَ اللّٰهُ யர்ஹமுகல்லாஹ் (அல்லாஹ் உனக்கு அருள் புரிவானாக) என்று இவன் கூற வேண்டும். அதற்குப் பதிலாக அவன் யஹ்திகுமுல்லாஹ் வயுஸ்லிஹு பாலகும் يَهْدِيْكُمُ اللّٰهُ وَيُصْلِحُ بَالَكُمْ (அல்லாஹ் உனக்கு நேர்வழி காட்டுவானாக! உனது நிலையைச் சீர்படுத்துவானாக!) என்று கூற வேண்டும்.

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாரேனும் தும்மி அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறினால் மற்ற சகோதரர் யர்ஹமுகல்லாஹ் எனக் கூறட்டும். அவர் யர்ஹமுகல்லாஹ் எனக் கூறினால் தும்மியவர் அவருக்காக யஹ்திகுமுல்லாஹ் வயுஸ்லிஹு பாலகும் என்று கூறட்டும்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரீ

நபி(ஸல்)அவர்கள் தும்மினால் தமது கையை அல்லது ஆடையை வாயில் வைத்து சப்தத்தைத் தாழ்த்திக் கொள்வார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா நூல்: அபூதாவூத்

3. அவன் நோயுற்றால் அவனை நோய் விசாரிக்கச் சென்று அவன் குணமடைய துஆச் செய்ய வேண்டும்.

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு ஐந்து விஷயங்களில் கடமைப்பட்டிருக்கிறான். அவை, ஸலாமுக்கு பதில் சொல்வது, நோய் விசாரிப்பது, ஜனாஸாவில் பங்கேற்பது, விருந்தழைப்பை ஏற்பது, அவர் தும்மி அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறினால் யர்ஹமுகல்லாஹ் எனக் கூறுவது ஆகியவையாகும். (நபிமொழி) -புகாரீ, முஸ்லிம்

4. அவன் இறந்துவிட்டால் அவனது ஜனாஸாவில் கலந்து கொள்ள வேண்டும்.

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு ஐந்து விஷயங்களில் கடமைப்பட்டிருக்கின்றான். அவை, ஸலாமிற்கு பதில் சொல்வது, நோய் விசாரிப்பது, ஜனாஸாவில் கலந்து கொள்வது, விருந்தழைப்பை ஏற்பது, தும்மி அல்ஹம்துலில்லாஹ் எனக் கூறினால் யர்ஹமுகல்லாஹ் என்று கூறுவது ஆகியவையாகும் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

5. அவன் ஒரு விஷயத்தில் சத்தியம் செய்தால் அதை நிறைவேற்றுவதற்கு உதவ வேண்டும்- சத்தியத்தை அவன் முறித்து விடாமல் இருப்பதற்காக.

நோயாளியை நோய் விசாரித்தல், ஜனாஸாவில் கலந்து கொள்ளுதல், தும்மியவருக்கு பதில் கூறல், சத்தியம் செய்தவருக்கு அதை நிறைவேற்ற உதவுதல், அநீதியிழைக்கப்பட்டவருக்கு உதவுதல், விருந்தழைப்பை ஏற்றுக் கொள்ளுதல், ஸலாமிற்குப் பதில் கூறல் ஆகியவற்றை நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு ஏவியுள்ளார்கள் என பர்ராவு பின் ஆஸிஃப் (ரழி) அறிவிக்கிறார்கள். நூல்: புகாரி, முஸ்லிம்

6. ஒரு பொருளில் அல்லது ஒரு காரியத்தில் அறிவுரை வழங்குமாறு கோரினால் அவனுக்கு அறிவுரை வழங்க வேண்டும். அதாவது அவ்விஷயத்தில் எது சரியாகவும் நன்மை பயப்பதாகவும் இருப்பதாக தான் கருதுகின்றானோ அதை அவனுக்குத் தெளிவுபடுத்த வேண்டும்.

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தன் சகோதரரிடம் அறிவுரை கேட்டால் அவருக்கு அறிவுரை வழங்கட்டும். (புகாரி)

7. தனக்கு விரும்புவதையே அவனுக்கும் விரும்ப வேண்டும். அதுபோல தனக்கு விரும்பாததை அவனுக்கும் விரும்பக் கூடாது.

தான் விரும்புவதையே தன் சகோதரனுக்கும் விரும்பாதவரை உங்களில் யாரும் முஃமினாக முடியாது என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ் (ரழி) புகாரீ, முஸ்லிம்

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: கட்டடங்களில் ஒரு பகுதி இன்னொரு பகுதியை இறுக்கிப் பிடித்து உதவியாக இருப்பதுபோல ஒருமுஃமின் பிற முஃமினுக்கு உதவியாக இருப்பான். அறிவிப்பவர்: அபூமூஸா (ரழி), -புகாரீ, முஸ்லிம்

8. அவனுக்கு உதவி செய்ய வேண்டும். அவனுக்கு உதவி, ஒத்தாசை தேவைப்படக்கூடிய எந்த இடத்திலும் நிராதரவாக அவனை விட்டுவிடக் கூடாது.

உனது சகோதரன் அநியாயம் செய்பவனாக இருந்தாலும் அநீதியிழைக்கப்பட்டவனாக இருந்தாலும் அவனுக்கு நீ உதவி செய் என நபி (ஸல்) கூறியபோது ஒரு மனிதர், 'அல்லாஹ்வின் தூதரே! அநீதியிழைக்கப்பட்டவனுக்கு உதவி செய்யலாம். அநியாயம் செய்பவனுக்கு எப்படி உதவுவது?' என்று கேட்டார். அதற்கவர்கள், 'அநியாயம் செய்வதிலிருந்து அவனைத் தடுக்க வேண்டும். அதுவே நீ அவனுக்கு உதவுவதாகும்' என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ் (ரழி) நூல்: புகாரீ, முஸ்லிம்

தன் சகோதர முஸ்லிமுடைய மானமரியாதையை யார் காப்பாற்றுகின்றாரோ மறுமையில் அவருடைய முகத்தை அல்லாஹ் நரகிலிருந்து காப்பாற்றுவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூதர்தா (ரழி) நூல்: அஹ்மத், திர்மிதி

9. அவனுக்கு ஏதேனும் தீங்கிழைப்பதோ துன்பம் கொடுப்பதோ கூடாது. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு முஸ்லிமுடைய இரத்தம், பொருள், மானம், மரியாதை ஆகிய அனைத்தும் பிற முஸ்லிமின் மீது ஹராமாகும். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

எந்த முஸ்லிமும் பிற முஸ்லிமைப் பயமுறுத்தக் கூடாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துர் ரஹ்மான் பின் அபீலைலா (ரழி), நூல்: அபூதாவூத், அஹ்மத்

எவருடைய நாவை விட்டும் கரத்தை விட்டும் பிற முஸ்லிம்கள் பாதுகாப்பாக இருக்கின்றார்களோ அவரே உண்மையான முஸ்லிம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர் (ரழி), நூல்: முஸ்லிம்

10. அவனிடம் பணிவுடன் நடந்து கொள்ள வேண்டும். அவனிடம் பெருமை அடிக்கக் கூடாது. மார்க்கம் அனுமதிக்கின்ற சபையில் அவனை எழுப்பி விட்டு அவனுடைய இடத்தில் அமரவும் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: மக்களை விட்டும் உன் முகத்தை (பெருமையோடு) திருப்பாதே! பூமியில் செருக்காய் நடக்காதே! அகந்தையும் ஆணவமும் கொண்ட எவனையும் அல்லாஹ் நேசிப்பதில்லை. (31:18)

அல்லாஹ்வுக்காக பணிவை மேற்கொள்ளக்கூடிய அடியாரை அல்லாஹ் உயர்த்தாமலில்லை என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), முஸ்லிம், திர்மிதி

அதுபோல நபி (ஸல்) அவர்கள் அனைவரிடமும் பணிவுடன் நடந்து கொள்வார்கள். விதவைகள் மற்றும் ஏழைகளுடன் சென்று அவர்களின் தேவைகளை நிறைவேற்றிக் கொடுப்பதைக் குறையாக எண்ணி கர்வம் கொள்ள

மாட்டார்கள்.'உங்களில் ஒருவர் மற்றவரை அவருடைய இடத்தை விட்டும் அகற்றிவிட்டு அவ்விடத்தில் அமர வேண் டாம். மாறாக விசாலமாக இருங்கள்' எனவும் நபீ(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி) -முஸ்லிம்

11. மூன்று நாட்களுக்கு மேல் அவனை வெறுக்கக் கூடாது. நபீ(ஸல்)கூறினார்கள்: ஒரு முஸ்லிம் தன் சகோதரனை மூன்று நாட்களுக்கு மேல் வெறுக்கக் கூடாது. இருவரும் சந்தித்தால் ஒருவரை ஒருவர் புறக்கணித்துச் செல்லக் கூடாது. அவர்களில் முதலில் ஸலாம் சொல்பவரே சிறந் தவர். அறிவிப்பவர்: அபூஅய்யூப் (ரழி), புகாரீ, முஸ்லிம்

...நீங்கள் ஒருவரையொருவர் வெறுத்துச் செல்லாதீர் கள் அல்லாஹ்வின் அடியார்களாகிய நீங்கள் ஒருவருக் கொருவர் சகோதரர்களாக இருங்கள் என நபீ(ஸல்)கூறி னார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), -முஸ்லிம்

12. அவனைப் பற்றி புறம் பேசுவது, இழிவாகக் கருதுவது, குறை கூறுவது, அவனைக் கேலி செய்வது, மோசமான பட்டப்பெயர் சூட்டி அழைப்பது, கோள் சொல்வது ஆகிய அனைத்தும் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: உங்களில் ஒருவர் மற்றவரைப் பற்றி புறம் பேச வேண்டாம். உங்களில் எவரேனும் இறந்து விட்ட தன் சகோதரனின் இறச்சியை உண்ண விரும்புவாரா என்ன? நீங்களே அதை வெறுப்பீர்கள். (49:12)

'ஈமான் கொண்டவர்களே! எந்த ஆண்களும் மற்ற எந்த ஆண்களையும் பரிகாசம் செய்ய வேண்டாம். ஒரு வேளை அவர்கள் இவர்களை விடச் சிறந்தவர்களாக இருக்கலாம். எந்தப் பெண்களும் மற்ற எந்தப் பெண்களையும் பரிகாசம் செய்ய வேண்டாம். ஒரு வேளை இவர்கள் அவர்களை விடச்

சிறந்தவர்களாக இருக்கலாம். நீங்கள் ஒருவரையொரு வர் குத்திப் பேசாதீர்கள். ஒருவருக்கொருவர் மோசமான பட்டப் பெயர்களைச் சூட்டி அழைக்காதீர்கள். இறைநம் பிக்கை கொண்டதன் பின்னர் மோசமான பெயர்களைச் சூட்டுவது மிகவும் கெட்ட விஷயமாகும். எவர்கள் இந்த நடத்தையைக் கைவிடவில்லையோ அவர்கள்தாம் கொடு மைக்காரர்கள். (49:11)

புறம்பேசுதல் என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? என நபி(ஸல்)அவர்கள் கேட்டதும் 'அல்லாஹ் வும் அவன் தூதருமே நன்கறிந்தவர்கள்' என நபித்தோ ழர்கள் கூறினர். உடனே நபி(ஸல்)அவர்கள் (புறம் பேசுதல் என்பது)'உன் சகோதரனைப் பற்றி அவன் விரும்பாததை நீ கூறுவதாகும்' என்று கூறினார்கள். அப்போது நான் கூறும் விஷயம் என் சகோதரனிடத்தில் இருந்தாலுமா? என்று கேட்கப்பட்டதற்கு நபி(ஸல்)அவர்கள், நீ கூறும் விஷயம் உன் சகோதரனிடத்தில் இருந்தால் நீ அவனைப் பற்றி புறம் பேசி விட்டாய்! நீ கூறும் விஷயம் உன் சகோ தரனிடத்தில் இல்லையென்றால் நீ அவனைப் பற்றி அவ தூறு கூறிவிட்டாய் என்று பதிலளித்தார்கள். அறிவிப்பவர் அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

கோள் சொல்லித்திரிபவன் சொவர்க்கத்தில் நுழைய மாட்டான் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஹுதைஃபா (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

18. அவனைத் திட்டக் கூடாது. அவன் இறந்த பிறகும் சரியே. நபி(ஸல்) கூறினார்கள்: ஒரு முஸ்லிமைத் திட்டுவது பாவ மாகும். அவனைக் கொலை செய்வதோ இறை நிராகரிப் பாகும். அறிவிப்பவர்: இப்னு முஸ்வூத் (ரழி) -புகாரி, முஸ்லிம்

இறந்தவர்களைத் திட்டாதீர்கள். ஏனெனில் அவர்கள் செய்ததற்கான கூலியை அவர்கள் அடைந்துவிட்டார்கள் (நபிமொழி) அறிவிப்பவர்: ஆயிஷா (ரழி) புகாரீ, முஸ்லிம்

14. அவன் மீது பொறாமைப்படுவது, குரோதம் கொள்வது, அவனைப் பற்றி தவறாக எண்ணுவது, துருவி துருவி ஆராய் வது ஆகியவை கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: நம்பிக்கை கொண்டவர்களே! அதிகமாக சந்தேகம் கொள்வதைத் தவிர்த்து விடுங்கள். ஏனெனில் சில சந்தேகங்கள் பாவமாக இருக்கின்றன. மேலும் (பிறரைத்) துருவித்துருவி ஆராயாதீர்கள். (49:12)

15. அவனை ஏமாற்றுவவோ அவனுக்கு துரோகம் செய்வதோ கூடாது. அவனைப் பொய்ப்படுத்தவும் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: நம்பிக்கை கொண்ட ஆண்கள் மற்றும் பெண்களுக்கு -அவர்கள் குற்றம் புரியாதிருக்கவே எவர்கள் துன்பம் அளிக்கின்றார்களோ அவர்கள் ஒரு மா பெரும் அவதூரையும் வெளிப்படையான பாவத்தின் விளை வையும் தம்மீது சுமந்துகொள்கிறார்கள். (33:58)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான்கு பண்புகள் எவ னிடத்தில் இருக்கிள்றனவோ அவன் வடிகட்டிய நயவஞ்ச கனாவான். எவனிடத்தில் அந்த நான்கு பண்புகளில் ஏதே னும் ஒரு பண்பு இருக்கின்றதோ அவன் அதைக் கைவிடா தவரை நயவஞ்சகத்தினுடைய ஒரு பண்பு அவனிடத்தில் இருந்து கொண்டே இருக்கும். (அவை வருமாறு) அவனை நம்பினால் துரோகம் செய்வான். பேசினால் பொய்யுரைப் பான், ஒப்பந்தம் செய்தால் அதற்கு மோசடி செய்வான், விவாதம் புரிந்தால் நேர்மை தவறிப் பேசுவான். அறிவிப்ப வர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரழி), நூல்: புகாரீ, முஸ்லிம்

16. அவனிடம் அழகிய முறையில் நடந்துகொள்ள வேண்டும். அதாவது அவனுக்கு நன்மை செய்ய வேண்டும். தீமை செய்யக் கூடாது. மலர்ந்த முகத்துடன் அவனைச் சந்திக்க வேண்டும். அவன் செய்யும் நல்லுபகாரத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவனுடைய தவறுகளை மன்னிக்க வேண்டும். அவனால் முடியாத காரியங்களைச் செய்யும்படி ஏவக் கூடாது.

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: நீ எங்கிருந்த போதிலும் அல்லாஹ்வை அஞ்சிக்கொள். தீமை செய்தால் தொடர்ந்து நன்மை செய்துவிடு. அது அத்தீமையைத் தொடைத்துவிடும். மக்களிடம் நல்ல முறையில் நடந்து கொள். அறிவிப்பவர்: அபூதர் (ரழி), நூல்: திர்மிதி, ஹாகிம்

17. அவன் தன்னை விட மூத்தவனாக இருந்தால் அவனிடம் மரியாதையுடன் நடந்து கொள்ள வேண்டும். சிறியவனாக இருந்தால் அன்புடன் நடந்து கொள்ள வேண்டும்.

பெரியவர்களை மதிக்காதவர்களும் சிறியவர்களுக்கு இரக்கம் காட்டாதவர்களும் நம்மைச் சார்ந்தவர்களல்ல என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ் (ரழி) நூல்: அபூதாவூத், திர்மிதி

## காஃபிர்களுடன் நடந்து கொள்ளும் முறை

இஸ்லாமிய மார்க்கத்தைத் தவிர ஏனைய மதங்களும் இஸங்களும் அசத்தியமானவை. அவற்றைப் பின்பற்றக்கூடியவர்கள் காஃபிர்களாவர். இஸ்லாம்தான் உண்மையான மார்க்கம். அதைப் பின்பற்றக்கூடியவர்கள் முஃமின்கள், முஸ்லிம்களாவர்.

அல்லாஹ் கூறுகிறான்: நிச்சயமாக இஸ்லாம்தான் அல்லாஹ்விடம் (ஒப்புக் கொள்ளப்பட்ட) மார்க்கமாகும். (3:19)

'இஸ்லாம் அல்லாத வேறு மார்க்கத்தை யாரேனும் மேற் கொள்ள விரும்பினால் அவனிடமிருந்து அது ஒருபோதும் ஏற் றுக் கொள்ளப்பட மாட்டாது. மேலும் மறுமையில் அவன் நஷ்டமடைந்தவர்களில் ஒருவனாக இருப்பான். (3:85)

இதனால் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளாத அனைவருமே கா∴பீர்கள் என்று ஒரு முஸ்லிம் கருத வேண்டும். கா∴பீருடன் பின்வரும் ஒழுக்கங்களைப் பேணி நடக்க வேண்டும்.

1. அவனுடைய நிராகரிப்பை ஏற்றுக் கொள்ளக் கூடாது. அதைப் பொருந்திக் கொள்ளவும் கூடாது. ஏனெனில் இறைநிராகரிப்பபை பொருந்திக்கொள்வதும் இறைநிராக ரிப்பாகும்.

2. அவனை வெறுக்க வேண்டும்- அல்லாஹ் அவனை வெறுப் பதனால். ஏனெனில் விருப்பும் வெறுப்பும் அல்லாஹ்வுக்கா கவே இருக்க வேண்டும். தன்னை நிராகரிக்கின்றான் என் பதற்காக அல்லாஹ் அவனை வெறுக்கும்போதெல்லாம் அல்லாஹ் வெறுக்கிறான் என்பதற்காக ஒரு முஸ்லிமும் அவனை வெறுக்க வேண்டும்.

3. அவனை நேசிப்பதும் அவனிடம் நட்பு கொள்வதும்கூடாது. ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கையாளர் கள் (தங்களைப் போன்ற) இறைநம்பிக்கையாளர்களை விடுத்து இறைநிராகரிப்போரை (ஒருபோதும் தம்) நேசர்க ளாய் ஆதரவாளர்களாய் ஆக்கிக் கொள்ள வேண்டாம். (3:28)

அல்லாஹ்வின் மீதும் மறுமை நாள் மீதும் நம்பிக்கை வைத்திற்கும் மக்கள், அல்லாஹ்வையும் அவன் தூதரை யும் எதிர்ப்பவர்கள் மீது அன்பு செலுத்துவதை (நபியே!) நீர் காணமாட்டீர், அத்தகையோர் அவர்களின் தந்தைய ராயினும் அல்லது அவர்களின் தனயர்களாயினும் அல்லது

அவர்களுடைய சகோதரர்களாயினும் அல்லது அவர்களுடைய குடும்பத்தினராயினும் சரியே! (58:22)

4. காஃபிர் முஸ்லிமை எதிர்த்துப்போராடக்கூடியவனாக இல்லையென்றால் முஸ்லிம் அவனிடம் நீதமாகவும் நேர்மையாகவும் நடந்துகொள்வதுடன் அவனுக்கு நன்மையே செய்ய வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்: தீன் (இறைமார்க்கம்) தொடர்பான விஷயத்தில் எவர்கள் உங்களுடன் போர் புரியவில்லையோ, உங்களை உங்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றவில்லையோ அவர்களிடம் நீங்கள் நல்லவிதமாகவும் நீதியுடனும் நடப்பதை அல்லாஹ் தடுக்கவில்லை. திண்ணமாக அல்லாஹ் நீதி செலுத்துவோரை நேசிக்கின்றான். (60:8)

5. பொதுவாக எல்லோரையும் போலவே அவனிடமும் அன்பாக நடந்து கொள்ள வேண்டும். உதாரணமாக அவனுக்குப் பசித்தால் உணவளிக்க வேண்டும். அவனுக்குத் தாகம் ஏற்பட்டால் தண்ணீர் கொடுக்க வேண்டும் அவன் நோயுற்றால் மருத்துவம் செய்ய வேண்டும். அல்லது அழிவிலிருந்து அவனைக் காப்பாற்ற வேண்டும். மேலும் அவனுக்கு ஏற்படும் துன்பம், தொல்லைகளை நீக்க வேண்டும்.

ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பூமியிலுள்ளவர்களுக்கு நீ இரக்கம் காட்டு. வானத்திலுள்ளவர்கள் உனக்கு இரக்கம் காட்டுவார்கள். அறிவிப்பவர்: இப்னுமஸ்வூத் (ரழி) நூல்: தப்ரானி, ஹாகிம்

6. அவன் முஸ்லிமுடன் போரிடக்கூடியவனாக இல்லையென்றால் அவனுடைய பொருளுக்கும் மானமரியாதைக்கும் பங்கம் விளைவிக்கக் கூடாது.

அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்: என் அடியார்களே! அநியாயம் செய்வதை எனக்கு நானே தடை செய்துள்ளேன். உங்களுக்கு இடையேயும் இதை தடைசெய்திருக்கிறேன் எனவே உங்களில் ஒருவர் மற்றவருக்கு அநியாயம் செய்ய வேண்டாம்... அறிவிப்பவர்: அபூதர்(ரழி), நூல்: முஸ்லிம்

7. அவனுக்கு அன்பளிப்பு வழங்குவதும் அவன் தரும் அன்பளிப்பை ஏற்றுக் கொள்வதும், அவன் யூத, கிறிஸ்தவனாக இருந்தால் அவனது உணவை உண்பதும் ஆகுமானதே.

'வேதம் கொடுக்கப்பட்டவர்களின் உணவு உங்களுக்கு ஆகுமாக்கட்டிருக்கின்றது என அல்லாஹ் கூறுகிறான். (5:5)

நபி(ஸல்)அவர்கள் மதீனாவில் ஒரு யூதனுடைய விருந்திற்கு அழைக்கப்பட்டார்கள். அவர்கள் அந்த அழைப்பை ஏற்று அவர்கள் தந்த உணவை உண்டிருக்கிறார்கள்.

8. முஃமினான பெண்ணை அவனுக்கு மணமுடித்துக் கொடுக்கக் கூடாது. ஆனால் வேதம் கொடுக்கப்பட்டவர்களின் பெண்களை மணந்து கொள்வது கூடும்.

அல்லாஹ் கூறுகிறான்: இறைவனுக்கு இணைவைக்கும் பெண்களை அவர்கள் ஈமான்கொள்ளும் வரை ஒரு போதும் நீங்கள் திருமணம் செய்யாதீர்கள். (2:221)

'முஃமினான நல்லொழுக்கமுடைய பெண்களையும்உங்களுக்கு முன்னர் வேதம் கொடுக்கப்பட்ட நல்லொழுக்கமுள்ள பெண்களையும் விலைப் பெண்டிராகவோ ஆசை நாயகிகளாகவோ வைத்துக் கொள்ளாது அவர்களுக்குரிய மஹ்ரைக் கொடுத்து மணமுடித்துக் கொள்வது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது'. (5:5)

9. அவன் தும்மி அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகளும் அல்லாஹ்வுக்கே) என்று கூறினால் அவனுக்காக, யஹ்திகுமுல்லாஹ் வயுஸ்லிஹுபாலகும் (அல்லாஹ் உனக்கு நேர்வழி காட்டி உனது நிலையை சீர்படுத்துவானாக) என்று கூற வேண்டும்.

ஏனென்றால் நபி(ஸல்)அவர்களிடம் யூதர்கள் தும்பும் போது அல்ஹம்து லில்லாஹ் என்று கூறுவார்கள்- யர்ஹமுகல்லாஹ் (அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவானாக) என நபி(ஸல்)அவர்கள் தங்களுக்காக கூற வேண்டுமென எதிர் பார்த்தவாறு. ஆனால் நபி(ஸல்)அவர்களோ யஹ்திகுமுல்லாஹ் வயுஸ்லிஹு பாலகும் என்றே கூறுவார்கள்.

10. அவனுக்கு முந்திக்கொண்டு ஸலாம் சொல்லக் கூடாது. அவன் ஸலாம் கூறினால் பதில் கூறலாம்.

அல்லாஹ் கூறுகிறான்: உங்களுக்கு (ஸலாம்) என்னும் வாழ்த்துக் கூறப்பட்டால் அதை விட அழகிய முறையில் அல்லது (குறைந்தபட்சம்) அதைப் போன்றாவது பதில் வாழ்த்துக் கூறுங்கள். (4:86)

வேதக்காரர்கள் உங்களுக்கு ஸலாம் சொன்னால் வஅலைக்கும் என்று கூறுங்கள் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ் (ரழி) -புகாரீ, முஸ்லிம்

(குறிப்பு:- வேதக்காரர்கள் முஸ்லிம்களுக்கு ஸலாம் கூறினால் அஸ்ஸாமு அலைக்கும் (உங்கள் மீது நாசம் உண்டாகட்டும்) என்று கூறுவதுண்டு. அப்படிக் கூறும் போது மட்டும் வஅலைக்கும் (உங்கள் மீதும் நாசம் உண்டாகட்டும்) என்று பதில் கூற வேண்டும் என்பது குறிப்பிடத் தக்கது. இதற்கு நபிமொழியில் ஆதாரம் உண்டு)

11. அவனைக் கடந்து செல்லும்போது பாதையின் ஓரத்திற்கு அவனைத் தள்ள வேண்டும்.

ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: யூத, கிறிஸ் தவர்களுக்கு முந்திக்கொண்டு ஸலாம் சொல்லாதீர்கள். அவர்களை நீங்கள் ஒரு பாதையில் சந்தித்தால் பாதை யின் ஓரத்திற்கு அவர்களைத் தள்ளுங்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம், திர்மிதி, அபூதாவூத்

12. (கலாச்சாரத்திலும் பழக்கவழக்கங்களிலும்) அவர்களுக்கு மாறு செய்ய வேண்டும். அவர்களுக்கு ஒப்பாக நடக்கக் கூடாது.

நபி(ஸல்) கூறினார்கள்: யார் பிற சமுதாயத்தினருக்கு ஒப்பாக நடக்கின்றாரோ அவர் அவர்களைச் சார்ந்தவர் கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: அபூதாவூது

## உயிரினங்களுடன் நடந்து கொள்வது

ஒரு முஸ்லிம் பெரும்பாலான உயிரினங்களை கண்ணிய மான படைப்பாகக் கருதி அதனுடன் பின்வரும் ஒழுங்குடன் நடந்து கொள்ள வேண்டும்.

1. அவைகளுக்கு பசித்தால் உணவும் தாகித்தால் தண்ணீ ரும் கொடுக்க வேண்டும்.

ஈரமான இதயமுள்ள ஒவ்வொன் றுக்கும் கூலி உண்டு என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு ரைரா (ரழி), நூல்: புகாரீ, முஸ்லிம்

2. அவைகளிடம் அன்பு செலுத்த வேண்டும். இரக்கம் காட்ட வேண்டும்.

நாங்கள் அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். (ஓரிடத்தில்)அவர்கள் தமது தேவையை நிறைவேற்றச்

சென்றார்கள். அப்போது நாங்கள் இரு குஞ்சுகளுடன்ஒரு சிட்டுக்குருவியைக் கண்டோம். அக்குஞ்சுகளை நாங்கள் வெளியே எடுத்தோம். அப்போது அதன் தாய்க் குருவி பட படவென சிறகடிக்கத் தொடங்கியது. நபி (ஸல்) அவர்கள் வந்ததும், குஞ்சுகளைப் பிரித்து, இச்சிட்டுக் குருவியை வேதனை செய்தது யார்? அதன் குஞ்சுகளை அதனிடத்தி லேயே விட்டுவிடுங்கள் என்று கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரழி), நூல்: அபூதாவூத்

3. அவற்றைக் கொல்லும்போது அல்லது அறுக்கும்போது அவற்றுக்குச் சிரமம் தரக் கூடாது.

நபி (ஸல்) கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எல்லா வற்றிற்கும் நன்மை செய்யுமாறு கடமையாக்கியுள்ளான். நீங்கள் உயிரினங்களைக் கொன்றால் அழகிய முறையில் கொல்லுங்கள். அறுத்தால் அழகிய முறையில் அறுங்கள். அறுக்கும் பிராணிகளுக்குச் சிரமம் தராதீர்கள். கத்தியை நன்கு தீட்டிக்கொள்ளுங்கள். அறிவிப்பவர்: ஷத்தாத் பின் அவ்ஸ் (ரழி), நூல்: முஸ்லிம்

4. எந்த விதத்திலும் அவற்றைத் துன்புறுத்தக்கக் கூடாது. பட்டினி போடுவது, அடிப்பது, அவற்றால் சுமக்கமுடியாத வற்றை அவற்றில் ஏற்றுவது, அவற்றை கோரப்படுத்திக் கொலை செய்வது அல்லது நெருப்பிலிடுவது ஆகிய எந்த விதத்திலும் சரி அவற்றைத் துன்புறுத்தக் கூடாது.

ஒரு பூனையைக் கட்டி வைத்து அதற்கு உணவு, கொ டுக்காமல் தானாகச் சென்று புற்பூண்டுகளை மேய விடா மல் அதை வதைத்துக் கொன்ற காரணத்திற்காக ஒரு பெண் நரகத்திற்குச் சென்றதாக நபி (ஸல்) அவர்கள் குறிப் பிட்டார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), புகாரி, முஸ்லிம்

நபி(ஸல்)அவர்கள் எறும்புகள் இருக்கும் இடத்தைக் கடந்து சென்றபோது அவை நெருப்பால் பொசுக்கப் பட்டிருந்தன. உடனே அவர்கள், ‘நெருப்பைப் படைத்தவ னைத் தவிர வேறு எவரும் நெருப்பால் வேதனை செய்யக் கூடாது’ என்று கூறினார்கள். (அபூதாவூத்)

5. உயிரினங்களில் ஊறுவிளைவிக்கக்கூடியவற்றைக் கொல் வது ஆகுமானதாகும். உதாரணமாக வெறிநாய், ஓநாய், பாம்பு, தேள், எலி போன்றவை.

நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்: ‘தீங்கு தரக்கூடிய ஐந்து உயிரினங்களை ஹரம் எல்லையிலும் மற்ற இடங்க ளிலும் கொல்வது கூடும். அவை, பாம்பு, கருப்பு வெள்ளை கலந்த காகம், எலி, வெறிநாய், பருந்து ஆகியவையாகும். அறிவிப்பவர்: ஆயிஷா (ரழி), நூல்: முஸ்லிம்

இதன் மற்றொரு அறிவிப்பில் தேளைக் கொல்லுமாறும் அதனைச் சபிக்குமாறும் வந்துள்ளது.

6. நன்மையைக் கருதி ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய கால்நடை களின் காதுகளில் அடையாளத்துக்காக சூடுபோடுவது கூடும். ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் ஸகாத்துடைய ஒட்ட கத்திற்கு தன் திருக்கரத்தாலேயே அடையாளத்திற்காக சூடுபோட்டார்கள். கால்நடைகள் அல்லாத மற்ற பிராணி களுக்கு இவ்வாறு சூடுபோடக்கூடாது. ஏனெனில் முகத் தில் சூடுபோடப்பட்ட ஒரு கழுதையை நபி(ஸல்) அவர்கள் கண்டதும் யார் இதன் முகத்தில் சூடுபோட்டாரோ அவரை அல்லாஹ் சபிக்கிறான் என்று கூறினார்கள்.

7. அவற்றுக்காக ஸகாத் கொடுக்க வேண்டியதிருந்தால் அதை நிறைவேற்றுவதன் மூலம் அவற்றில் அல்லாஹ்வுக் குரிய கடமை இருப்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

8. வணக்க வழிபாடுகளை விட்டும் அவற்றில் ஈடுபடுவதும் அல்லாஹ்வை நினைவு கூர்வதை விட்டும் பாராமுகமாகி விடுவதோ கூடாது.

'இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்கள் பிள்ளைகளும் உங்கள் செல்வங்களும் அல்லாஹ்வை நினைவு கூர்வதை விட்டும் உங்களை அலட்சியத்தில் ஆழ்த்தி விட வேண்டாம்' என அல்லாஹ் கூறுகிறான். (63:9)

நபி(ஸல்)கூறினார்கள்: குதிரைகள் மூன்று நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. அவை, ஒரு மனிதனுக்கு நன்மையாகவும் ஒரு மனிதனுக்கு அவன் நரகில் நுழைவதற்குத் திரையாகவும் ஒரு மனிதனுக்குப் பாவமாகவும் அமைகின்றன.

ஒருவன் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போருக்காக) அதைப் புற்பூண்டுகளுள்ள இடத்தில் நீளமான கயிற்றால் கட்டிவிடுகிறான் என்றால் அவ்விடத்தில் அது எந்த அளவுக்கு மேய்ந்ததோ அந்த அளவுக்கு அவனுக்கு நன்மைகள் உண்டு. அது கயிற்றை அறுத்துக் கொண்டு எல்லா இடத்தையும் ஒரு முறை அல்லது இரு முறை சுற்றி வந்தாலும் அது எடுத்துவைக்கின்ற எட்டுகளுக்கும் அதன் விட்டைகளுக்கும் அவனுக்கு நன்மைகளுண்டு. அது எங்காவது ஓர் ஆற்றுக்குச் சென்று தண்ணீர் குடித்தாலும்- அதற்குத் தண்ணீர் புகட்ட வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு இல்லாவிட்டாலும்- அவனுக்கு நன்மைகள் உண்டு.

இன்னொருவன் பிறரிடம் யாசிக்காமல் தன்னிறைவுடனும் சுயமரியாதையுடனும் இருப்பதற்காக குதிரை வளர்க்கிறான். அதேநேரத்தில் அதற்குரிய உரிமைகளையும் கடமைகளையும் அவன் மறந்துவிடுவதில்லை என்றால் அது அவனுக்கு நரகில் நுழைவதற்குத் திரையாக அமையும்.

மற்றொருவன் பெருமைக்காகவோ முகஸ்துதிக்காக வோ அல்லது முஸ்லிம்களிடம் பகைமை பாராட்டுவதற்கா கவோ குதிரை வளர்க்கிறான் என்றால் அது அவனுக்குப் பாவமாக அமையும்.

அறிவிப்பவர்:அபூஹுரைரா (ரழி) நூல்: புகாரி

(குறிப்பு:- அதற்குரிய உரிமைகள் கடமைகள் என்பது அதில் பாரபட்ச மில்லாமல் சுமைகளை, சவாரியை ஏற்று வது, இந்த சமயத்தில் அதனிடம் மென்மையாகவும், கரு ணையுடனும் நடந்து கொள்வது, அதற்கு உணவளித்து, தண்ணீர் புகட்டி அதனிடம் நல்லவிதமாக நடந்து கொள் வது, அதற்குரிய ஸகாத்தை நிறைவேற்றுவது போன்ற வையாகும்.)

## சபை ஒழுக்கங்கள்

ஒரு முஸ்லிமுடைய முழு வாழ்க்கையும் இஸ்லாமிய வழி காட்டுதலுக்கு உட்பட்டதாகவும் அதனைப் பின்பற்றியதாக வும் அமைய வேண்டும். அவ்வழிகாட்டுதல் வாழ்க்கையின் அனைத்து விவகாரங்களிலும் உள்ளது- சபையில் அமரும் முறை, சபையில் பிற சகோதரர்களுடன் அமர்ந்திருப்பது எப்படி என்பது உட்பட. எனவே ஒரு முஸ்லிம் சபையில் அமரும் போது பின்வரும் ஒழுக்கங்களைக் கடைபிடிக்க வேண்டும்.

சபையில் அமர விரும்பினால் முதலில் அங்கு அமர்ந்திருப்ப வர்களுக்கு ஸலாம் கூறி பிறகு அமர வேண்டும். சபையிலி ருந்து யாரையும் எழுப்பிவிட்டு அவருடைய இடத்தில் அம ரக்கூடாது. அதுபோல இரண்டு பேருக்கு மத்தியில் அவர் களின் அனுமதியின்றி உட்காரக் கூடாது.

'?_ங்களில் யாரும் எவரையும் அவருடைய இடத்திலி ருந்து எழுப்பி அங்கு அமர வேண்டாம். ஆயினும் (சபையில்)

விசாலமாக அமர்ந்து கொள்ளுங்கள் என நபி(ஸல்) அவர் கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

இப்னு உமர் (ரலி) அவர்களுக்காக ஒருவர் சபையில் தனது இடத்திலிருந்து எழுந்தபோது அவ்விடத்தில் அவர் கள் அமரவில்லை. ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் 'சபையில் இருவருக்கு மத்தியல் அவர்கள் அனுமதியின்றி அமர்வது எவருக்கும் ஆகுமானதல்ல' எனக் கூறினார்கள். (அபூதா வூத், திர்மிதி)

2. சபையில் ஒருவர் தன் இடத்திலிந்து எழுந்து சென்று விட்டு பிறகு திரும்பவும் வந்தால் அந்த இடத்திற்கு அவரே உரித் தானவர்.

நபி(ஸல்) கூறினார்கள்: உங்களில் ஒருவர் சபையில் தம் இடத்திலிருந்து எழுந்து சென்றுவிட்டுத் திரும்பவும் வந்தால் அவரே அவ்விடத்திற்கு உரித்தானவர். அறிவிப் பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

3. சபையின் மத்தியில் சென்று யாரும் அமரக் கூடாது. ஏனெ னில் 'சபையின் மத்தியில் சென்று அமர்பவரை நபி(ஸல்) சபித்துள்ளார்கள்' (அபூதாவூத்)

4. சபையில் அமர்ந்திருக்கும்போது பேண வேண்டிய சில ஒழுக்கங்கள்:

பல்குத்துவது, மூக்கில் கைவிடுவது கூடாது. துப்புவது, காருவதைத் தவிர்க்க வேண்டும். அதிக அசைவின்றி அமைதி யாக இருக்க வேண்டும். பேசுவதாயின் சரியானதைப் பேச வேண்டும். தன்னைப் பற்றியும் தன் குடும்பத்தைப் பற்றியும் பெருமையாகப் பேசக் கூடாது. மற்றவர் பேசும்போது செவி தாழ்த்திக் கேட்க வேண்டும். பேசுபவரைக் குறுக்கீடு செய்யக் கூடாது.

இவ்வொழுக்கங்களைக் கடைபிடிக்கின்ற முஸ்லிம் இரு காரணங்களுக்காக அவற்றைக் கடைபிடிக்கிறான். ஒன்று: தன் செயலால், பண்பால் தன் சகோதரர்களுக்குத் தொல்லை தரக்கூடாது என்பதற்காக. ஏனென்றால் ஒரு முஸ்லிமுக்கு தொல்லை கொடுப்பது ஹராமாகும்.

'எவருடைய நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் பிற முஸ்லிம் கள் பாதுகாப்பு பெறுகின்றார்களோ அவரே உண்மையான முஸ்லிம்' என்பது நபிமொழி.

இரண்டு: தனது சகோதரர்களின் அன்பையும் நேசத்தை யும் பெற வேண்டும் என்பதற்காக. ஏனென்றால் முஸ்லிம்க ளிடம் நேச பாசத்துடன் நடந்து கொள்ள வேண்டும் என்று மார்க்கம் கட்டளையிட்டிருக்கின்றது.

## நடைபாதைகளில் அமர்ந்தால்

நடைபாதைகளில் அமர்ந்தால் பின்வரும் ஒழுக்கங்க ளைப் பேண வேண்டும்:

1. பார்வையைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும். அந்நியப் பெண்களைப் பார்க்கக் கூடாது. மேலும் யாரையும் பொறா மையோடு அல்லது இழிவாகப் பார்க்கக் கூடாது.
2. பாதசாரிகளுக்குத் தொல்லை கொடுக்கக் கூடாது. அதா வது திட்டுவது, கேவலமாகப் பேசுவது, குறை கூறுவது, அடிப்பது, பொருட்களைப் பறிப்பது, பாதையின் குறுக்கே நின்று பாதசாரிகளைத் தடுப்பது, வழிப்பறி நடத்துவது இன்னும் போன்ற செயல்களைச் செய்யக் கூடாது.
3. பாதசாரிகளில் எவர் ஸலாம் சொன்னாலும் அதற்குப் பதில் சொல்ல வேண்டும். ஏனெனில் ஸலாமுக்குப் பதில் சொல் வது கடமையாகும்.

'உங்களுக்கு (ஸலாம் என்னும்) வாழ்த்துக் கூறப்பட் டால் அதை விட அழகிய முறையில் அல்லது (குறைந்த பட் சம்) அதைப் போன்றாவது பதில் வாழ்த்துக் கூறுங்கள். (4:86)

4. தன் முன் ஒரு நன்மை தவிர்க்கப்படுவதை அல்லது அலட் சியப்படுத்தப்படுவதைக் கண்டால் அந்த நன்மையைச் செய்யுமாறு சம்பந்தப்பட்டவருக்கு ஏவவேண்டும். ஏனெ னில் இந்த நிலையில் அந்த நன்மையை ஏவுவதற்கு அவர் தான் பொறுப்பாவார். காரணம் நன்மையை ஏவுவது ஒவ் வொரு முஸ்லிம் மீதும் கடமையாகும்.

உதாரணமாக தொழுகைக்காகப் பாங்கு சொல்லப்படு கிறது சபையிலுள்ளவர்கள் அல்லது வழியிலுள்ளவர்கள் யாரும் தொழுகைக்குச் செல்லவில்லையெனில் தொழச் செல்லுமாறு அவர்களை ஏவுவது குறிப்பாக அவன் மீது கடமையாகிவிடுகின்றது.

5. அதுபோல தன்முன் ஒரு தீமை அரங்கேற்றப்படுவதைக் கண்டால் அதைத் தடுத்து நிறுத்த வேண்டும். ஏனெனில் நன்மையை ஏவுவதைப்போலவே தீமையைத் தடுப்பதும் ஒவ்வொரு முஸ்லிம் கடமையாகும்.

'உங்களில் யாரும் தீமையைக் கண்டால் அதைத் தன் கரத்தால் தடுத்து நிறுத்தட்டும். அதற்கு இயலவில்லையெ னில் நாவால் தடுத்து நிறுத்தட்டும். அதற்கும் இயலவில் லையெனில் மனதால் வெறுத்து ஒதுங்கட்டும். இதுவே ஈமானின் பலவீனமான நிலை' என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஸயீத் (ரழி), நூல்: முஸ்லிம்

உதாரணமாக ஒருவன் மற்றவன் மீது வரம்பு மீறிவிடு கிறான்- அவனை அடித்து விடுகிறான் அல்லது அவனது பொருளை பறித்து விடுகிறான் எனில் அவனால் முடிந்த வரை அத்தீமையை தடுப்பது அவனது கடமையாகும்.

6. பாதை தவறியவருக்கு பாதையைக் காட்ட வேண்டும்.

இவ்வனைத்து ஒழுக்கங்களுக்கும் நபிவழியில் ஆதார மிருக்கின்றது.

நடைபாதைகளில் அமர்வதைவிட்டும் உங்களை நான் எச்சரிக்கின்றேன் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அப்போது நபித்தோழர்கள் அதுதான் நாங்கள் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கும் இடமாகும். அதை விட்டால் எங்க ளுக்கு வேறு வழியில்லையே! என்று கூறியதும் ‘நீங்கள் அமர்ந்துதான் ஆகவேண்டுமென்றால் பாதைக்குரிய கட மைமையை நறைவேற்றி விடுங்கள்’ என்று நபி(ஸல்)அவர் கள் கூறினார்கள். ‘பாதைக்குரிய கடமை என்ன? என்று தோழர்கள் கேட்டதும் அதற்கு,‘(அந்நியப் பெண்களை விட் டும்)பார்வையைத் தாழ்த்திக் கொள்வது, (பிறருக்குத்) தொல்லை தராமலிருப்பது, ஸலாமிற்குப் பதில் சொல்வது, நன்மையை ஏவுவது, தீமையைத் தடுப்பது’ என நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். அறிவிப்பவர்: அபூஸயீத்(ரழி) நூல்: புகாரீ, முஸ்லிம்

வேறு சில அறிவிப்புகளில் வழி தவறியவருக்கு வழி காட் டுவது என்றும் வந்துள்ளது.

சபையிலிருந்து எழுந்து செல்லும்போது அல்லாஹ்வி டம் பாவமன்னிப்புத் தேடுவதும் சபை ஒழுக்கங்களில் ஒன் றாகும். ஏனெனில் அந்த சபையில் ஏதேனும் தவறு நடந்தி ருந்தால் அதற்குப் பரிகாரமாக அது ஆகிவிடும்.

நபி(ஸல்) சபையிலிருந்து எழுந்திருக்க விரும்பினால்,

سُبْحَانَكَ اللَّهُمَّ وَ بِحَمْدِكَ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ

‘சுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக, அஷ்ஹது அல்லாயி லாஹ இல்லா அன்த அஸ்த:.க்.:பிருக வஅதூபு இலைக்க’

என்று கூறுவார்கள். இதுபற்றி கேட்கப்பட்டதற்கு சபையில் நடந்த தவறுகளுக்கு இது பரிகாரமாக அமையும் என்று கூறினார்கள். (திர்மிதி)

## உண்பது, குடிப்பதன் ஒழுக்கங்கள்

ஒரு முஸ்லிம் உண்பதையும் பருகுவதையும் மற்ற காரியங் களுக்கு உதவியாகக் கருதவேண்டுமே தவிர அதுதான் பிர தான நோக்கமாகக் கருதக்கூடாது. அவன் உண்ணுகிறான் பருகுகிறான் என்றால் தன் உடல் நலத்தைப் பேணி அதன் மூலம் இறைவழிபாடு செய்ய வேண்டும் என்பதற்காக. அவ் வழிபாடுதான் மறுமையின் வெற்றிக்கும் நற்பாக்கியத்துக்கும் உரியவனாக அவனை ஆக்குகிறது. எனவே அவன் உண்ண வேண்டும், பருக வேண்டும் என்ற மோகத்திற்காக உண்ண வோ பருகவோ கூடாது. இங்கே அவன் உண்ணும்போதும் பருகும்போதும் குறிப்பட்ட சில மார்க்க ஒழுக்கங்களைக் கடைப்பிடிப்பது அவசியமாகும்.

## உண்ணும் முன்னுள்ள ஒழுக்கங்கள்

1. அவனது உணவும் பானமும் தூய்மையானதாக இருக்க வேண்டும். அதாவது அதில் ஹராம் ஏதும் கலந்துவிடாமல் ஹலாலாக இருக்கவேண்டும்.

   'இறைவிசுவாசிகளே! நாம் உங்களுக்கு அளித்திருப்ப வற்றில் தூய்மையானதையே உண்ணுங்கள்.'(2:172)

   தூய்மையானது என்றால் ஹலாலானது- அசுத்தமாக வோ அருவருக்கத்தக்தாகவோ இல்லாதது என்று பொ ருள். 'ஹராமின் மூலம் வளர்ந்த உடல் நரகத்திற்குத் தகு தியாகிவீடுகின்றது' என்பது நபிமொழி. அறிவிப்பவர்: அபூ பக்கர் (ரழி), நூல்: ஹாக்கிம்

2. உண்ணும்போதும் குடிக்கும்போதும் 'வழிபாடு செய்வதற்கு சக்தி கிடைக்க வேண்டும் என்பதற்காக இதைச் செய்கிறேன்' என எண்ணிக் கொள்ள வேண்டும். காரணம் உண்பதற்கும் குடிப்பதற்கும் கூலி கிடைக்க வேண்டுமென்பதற்காக.. ஏனென்றால் அனுமதிக்கப்பட்ட ஒரு காரியம் நல்லெண்ணத்தின் காரணமாக கூலி கிடைக்கக் கூடிய ஒரு வணக்கமாக மாறிவிடுகிறது.

3. கை அசுத்தமாக இருந்தால் அல்லது சுத்தமாக இருக்கிறது என்ற உறுதியில்லாமலிருந்தால் கழுவிக் கொள்ள வேண்டும்.

4. நபி(ஸல்)அவர்களைப்போல பணிவோடு அமர வேண்டும். நான் சாய்ந்து கொண்டு உண்ண மாட்டேன் என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஜுஹைஃபா (ரழி), -புகாரி (ஏனெனில் சாய்ந்து அமர்வதில் பணிவு இருக்காது)

ஒரு அடிமை சாப்பிடுவதுபோல சாப்பிடுவேன். ஒரு அடிமை அமர்வதுபோல(பணிவாக)அமர்வேன் என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரழி)அறிவிக்கும் செய்தி அபூயஃலாவில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

5. இருப்பதைக் கொண்டு திருப்திகொள்ளவேண்டும். உணவைக் குறை கூறக்கூடாது. விரும்பினால் உண்ணவேண்டும் இல்லையெனில் விட்டுவிட வேண்டும்.

நபி(ஸல்)எந்த உணவையும் ஒருபோதும் குறை கூறியதில்லை. விரும்பினால் உண்பார்கள். இல்லையெனில் விட்டுவிடுவார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி

6. மற்றவருடன் சேர்ந்து உண்ண வேண்டும். அதாவது விருந்தாளி, மனைவி, குழந்தை, அல்லது வேலைக்காரனுடன் சேர்ந்து உண்ண வேண்டும்.

அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் சாப்பிடுகிறோம். ஆயி னும் வயிறு நிரம்புவதில்லை! (காரணம் என்ன?) என நபித் தோழர்கள் கேட்டதும், 'நீங்கள் தனித்தனியாக உண்ணு கிறீர்கள்போலும்! என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கவர்கள், 'ஆம்' என்றதும், நபி (ஸல்) அவர்கள், 'நீங் கள் சேர்ந்து உண்ணுங்கள். உண்ணும்போது பிஸ்மில் லாஹ் கூறுங்கள். அல்லாஹ் உங்கள் உணவில் பரகத் செய்வான் என்று கூறினார்கள். (அபூதாவூத்)

## உண்ணும்போது கடைபிடிக்க வேண்டியவை

**1. பிஸ்மில்லாஹ் சொல்லி ஆரம்பிக்க வேண்டும்.**

நபி (ஸல்) கூறினார்கள்: நீங்கள் உண்ணும்போது பிஸ் மில்லாஹ் சொல்லி உண்ணுங்கள். ஆரம்பத்தில் பிஸ்மில் லாஹ் சொல்ல மறந்துவிட்டால் (நினைவு வந்ததும்) பிஸ்மில் லாஹி அவ்வலஹு வஆகிரஹு என்று கூறுங்கள். அறிவிப் பவர்: ஆயிஷா (ரழி), நூல்: அபூதாவூத், திர்மிதி

بِسْمِ اللهِ أَوَّلَهُ وَآخِرَهُ பொருள்: இதன் ஆரம்பத்திலும் இறுதியி லும் அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (உண்கிறேன்)

**2. சாப்பிட்டு முடித்ததும் அல்லாஹ்வைப் புகழ வேண்டும்.**

நபி (ஸல்) கூறினார்கள்: ஒருவர் சாப்பிட்டு முடித்ததும் 'அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனீ ஹாதா வரஸக னீஹி மின் கைரி ஹவ்லிம் மின்னீ வலா குவ்வா'

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ أَطْعَمَنِيْ هَذَا وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلاَ قُوَّةٍ

என்று கூறினால் அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படு கின்றன. அறிவிப்பவர்: முஆத் பின் அனஸ் (ரழி), திர்மிதி

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே எனக்கு இவ்வுணவை அளித்தான். என்னிடமிருந்து எவ்வித முயற்சியும் சக்தியுமின்றி இதனை எனக்கு அருளினான்)

3. வலது கையால் (ரொட்டி போன்ற உணவாக இருந்தால் மூன்று விரல்களால்) உண்ண வேண்டும். உணவைக் கொஞ்சமாக அள்ளி நன்கு மென்று சாப்பிட வேண்டும். தட்டின் ஓரத்திலிருந்து சாப்பிட வேண்டும். நடுவிலிருந்து சாப்பிடக் கூடாது.

உமர் பின் அபீஸலமா (ரலி) கூறியதாவது: நான் நபி (ஸல்) அவர்களின் மடியில் சிறுவனாக இருந்தபோது எனது கை தட்டில் இங்கும் அங்குமாகச் சென்று கொண்டிருந்தது. அப்போது, 'குழந்தாய்! நீ சாப்பிடும்போது பிஸ்மில்லாஹ் கூறி வலது கையால் தட்டின் ஓரத்திலிருந்து சாப்பிடு' என நபி (ஸல்) என்னிடம் கூறினார்கள். நூல்: புகாரீ, முஸ்லிம்

4. உண்ணும் உணவிலிருந்து ஏதாவது கீழே விழுந்து விட்டால் அழுக்கை அகற்றிவிட்டு அதை உண்ண வேண்டும்.

உங்களின் ஒருவரது உணவிலிருந்து ஒரு பருக்கை கீழே விழுந்து விட்டால் அதை எடுத்து அதன் அழுக்கை அகற்றி விட்டு அதை அவர் சாப்பிடட்டும். ஷைத்தானுக்காக அதை விட்டு விடவேண்டாம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர் (ரழி), நூல்: முஸ்லிம்

5. சூடான உணவில் ஊதக்கூடாது. ஆறாதைவரை அதைச் சாப்பிடவும் கூடாது. மேலும் தண்ணீர் அருந்தும்போது அதில் மூச்சுவிடக் கூடாது. பாத்திரத்திற்கு வெளியே மூச்சு விட்டுக் கொள்ள வேண்டும்.

பாத்திரத்தில் மூச்சுவிடுவதையும் அதில் ஊதுவதையும் நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: திர்மிதி

6. வயிறு புடைக்க உண்ணுவதைத் தவிர்க்க வேண்டும்.

தன் வயிறை விட மோசமான பையை எந்த மனிதனும் நிரப்புவதில்லை. ஒரு மனிதனுக்கு தன் முதுகுத் தண்டை நிமிர்த்தும் அளவு சில கவளங்கள் போதுமானதே. தவிர்க்க இயலாத நிலையில் கால் வயிறு உணவும் கால் வயிறு தண்ணீரும் கால் வயிறு மூச்சு விடுவதற்கும் இருக்கட்டும் என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: மிக்தாம் (ரழி), -திர்மிதி

7. சபையில் தன்னை விட வயதில், அந்தஸ்தில் மூத்தவர் இருக்கும்போது தான் முந்திக் கொண்டு உண்ணப்பருக துவங்கக் கூடாது. இது ஒழுக்கத்துக்கு இடையூறானது.

8. சாப்பிடும்போது தன்னுடன் சாப்பிடும் சஹாாக்களைப் பார்ப்பதும் கூர்ந்து கவனிப்பதும் கூடாது. அதனால் அவர்கள் வெட்கப்படலாம்.

9. மக்கள் வெறுக்கின்ற பழக்கங்களைச் செய்யக் கூடாது.

அதாவது பாத்திரத்தில் கையை உதறுவது, தலையை பாத்திரத்தின் பக்கம் சாய்ப்பது கூடாது- அவனது வாயிலிருந்து ஏதாவது அதில் வீழுந்து விடாமல் இருப்பதற்காக. அதுபோல வாய் வைத்து கடித்த ரொட்டியின் மீதத்தை பாத்திரத்தில் போடவோ அசிங்கமான, வெறுக்கத்தக்க பேச்சுக்களைப் பேசவோ கூடாது. இதனால் உடன் சாப்பிடும் சஹாாக்களுக்குத் தொல்லை ஏற்படலாம்.

## உண்ட பின் கடைபிடிக்க வேண்டியவை

1. நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றி வயிறு நிரம்புவதற்கு முன்பாகவே சாப்பிட்டு முடித்து விட வேண்டும்.
2. கையைச் சூப்பிவிட்டுத் துடைத்துவிட வேண்டும். அல்லது சுத்தமாகக் கழுவிவிட வேண்டும்.

3. சிந்திய உணவை பொறுக்கி எடுக்க வேண்டும். காரணம் இது அருட்கொடைக்கு நன்றி செலுத்துவதாக அமையும்.
4. வாயை சுத்தப்படுத்துவதற்காக பற்களைக் குத்தி வாய்க் கொப்பளிக்க வேண்டும்.
5. உண்டு, குடித்து முடித்தவுடன் அல்லாஹ்வைப் புகழ வேண்டும்.

விருந்துக்குச் சென்றால் விருந்து கொடுத்தவருக்காக 'அல்லாஹும்ம பாரிக் லஹும் ஃபீமா ரஸக்தஹும் வஃக் ஃபிர்லஹும் வர்ஹம்ஹும்' (முஸ்லிம்) என்றும்

'அல்லாஹும்ம அத்இம் மன் அத்அமனீ வஸ்கி மன் ஸகானீ' (முஸ்லிம்) என்றும் பிரார்த்திக்க வேண்டும்.

اَللّٰهُمَّ بَارِكْ لَهُمْ فِيْمَا رَزَقْتَهُمْ وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ

اَللّٰهُمَّ أَطْعِمْ مَنْ أَطْعَمَنِيْ وَاسْقِ مَنْ سَقَانِيْ

(பொருள்: இறைவா! இவர்களுக்கு நீ வழங்கியவற்றில் பரகத்து செய்வாயாக! இவர்களை மன்னித்து, அருள் புரி வாயாக! இறைவா! எனக்கு உணவளித்தவருக்கு நீ உண வளிப்பாயாக. எனக்கு பானம் அளித்தவருக்கு நீ பானம் புகட்டுவாயாக)

## பயணத்தின் சட்டதிட்டங்கள்

பயணம் வாழ்க்கையின் அவசியத் தேவைகளில் ஒன்று. ஹஜ், உம்ரா செய்வது, போர் செய்வது, வியாபாரம் செய்வது, கல்வியைத் தேடுவது, சில சகோதரர்களை சந்திப்பது ஆகிய வற்றுக்குப் பயணம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகின் றது. இதனால் மார்க்கம் பயணம், அதன் சட்டதிட்டங்கள் மற் றும் ஒழுக்கங்களுக்கு மிக முக்கியத்துவம் தந்திருக்கின்றது.

எனவே அதனைக் கற்று அதன்படி நடந்து கொள்வது ஒழுக் கமுள்ள முஸ்லிம் மீது கடமையாகும். முதலில் பயணத்தின் சட்டதிட்டங்களைப் பார்ப்போம்.

1. நான்கு ரக்அத்து தொழுகைகளைச் சுருக்கி இரண்டு ரக் அத்களாகத் தொழ வேண்டும். மஃரிபை மூன்றாகவே தொழ வேண்டும். அவன் வசிக்கின்ற ஊரைக் கடந்தது முதல் திரும்பி வரும் வரை சுருக்கித் தொழலாம். (பயண தூரம் எவ்வளவு என்பதில் கருத்து வேறுபாடுள்ளது) ஆயினும் அவன் பயணம் மேற்கொண்ட ஊரில் நான்கு நாட்கள் அல்லது அதற்கு மேல் தங்க விரும்பினால் அந்நாட்களில் சுருக்கித் தொழக் கூடாது. ( இதில் கருத்து வேறுபாடுள்ளது) பயணத் தை முடித்துத் திரும்பி வரும்போது ஊர் வந்து சேரும் வரை சுருக்கித் தொழலாம்.

அல்லாஹ் கூறுகிறான்: நீங்கள் பயணம் புறப்பபட்டால் சில தொழுகைகளைச் சுருக்கித் தொழுவதில் உங்கள் மீது குற்றமில்லை. (4:101)

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் மதீனாவிலிருந்து மக்காவிற்குப் புறப் பட்டோம். நபி (ஸல்) அவர்கள், மதீனா திரும்பி வரும் வரை (நான்கு ரக்அத் தொழுகைகளை) இரண்டிரண்டு ரக்அத்க ளாகத் தொழுதார்கள். (புகாரி, முஸ்லிம்)

2. பயணத்தில் மூன்று நாட்களுக்கு காலுறை மீது மஸஹ் செய்யலாம்.

பயணிகளுக்கு மூன்று நாட்களையும் பயணியல்லாதோ ருக்கு ஒரு நாளையும் (காலுறை மீது மஸஹ் செய்ய) நபி (ஸல்) அவர்கள் நிர்ணயம் செய்தார்கள்.

அறிவிப்பவர்: அலீ (ரழி), நூல்: முஸ்லிம்

3. தண்ணீர் கிடைக்காவிட்டால் அல்லது அதைப் பெறுவது சிரமமானால் அல்லது கூடுதலான விலை கொடுத்து அதை வாங்க வேண்டியதாக இருந்தால் தயம்மும் செய்துகொள் ளலாம்.

'நீங்கள் நோயாளிகளாகவோ பயணியாகவோ இருந் தால் அல்லது உங்களில் ஒருவர் மலஜலம் கழித்துவிட்டு வந்தால் அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தால் பிறகு உங்களுக்குத் தண்ணீர் கிடைக்கவில்லையெனில் சுத்தமான மண்ணைக் கொண்டு உங்களைத் தூய்மை யாக்கிக் கொள்ளுங்கள். அதாவது (அதனை) உங்களின் முகங்களிலும் கைகளிலும் தடவிக்கொள்ளுங்கள்' (4:43)

4. நோன்பு காலத்தில் நோன்பை விட்டுக்கொள்ளலாம். பிறகு விடுபட்டதைக் களாச் செய்து கொள்ள வேண்டும்.

'உங்களில் யாரேனும் நோயாளியாகவோ, பயணத்தி லோ இருந்தால், அவர் (அந்நாட்களில் நோன்பு நோற்காமல்) மற்ற நாட்களில் கணக்கிட்டு நோற்றுக் கொள்ள வேண்டும்' (2:184)

5. வாகனத்தில் அமர்ந்து கொண்டு அது செல்லும் திசை நோக்கி நபிலான தொழுகைகளைத் தொழலாம்.

நபி(ஸல்)அவர்களை வாகனம் எத்திசையில் கொண்டு சென்றாலும் அவர்கள் வாகனத்தின் மீதமர்ந்து (நபிலைத்) தொழுவார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி) -புகாரீ

6. லுஹரையும் அஸரையும், மஃரிபையும் இஷாவையும் சேர்த்து முற்படுத்தி அல்லது பிற்படுத்தித் தொழலாம். அதாவது லுஹரையும் அஸரையும் சேர்த்து லுஹருடைய நேரத்தில் அல்லது அஸருடைய நேரத்தில் அதுபோல மஃரிபையும் இஷாவையும் சேர்த்து மஃரிபுடைய நேரத்திலோ அல்லது இஷாவுடைய நேரத்திலோ தொழுது கொள்ளலாம்.

தபூக் யுத்தத்திற்காக நாங்கள் நபி(ஸல்)அவர்களுடன் புறப்பட்டோம். அவர்கள் லுஹரையும் அஸரையும் சேர்த்து, ம:.ரிபையும் இஷாவையும் சேர்த்து தொழுதார்கள்.
அறிவிப்பவர்: முஆத்(ரழி), நூல்: புகாரீ,முஸ்லிம்

## பயணத்தின் ஒழுங்குகள்

1. பயணத்திற்கு முன் ஒரு முஸ்லிம் தான் அநியாயமாக அபகரித்துக்கொண்ட பொருட்களையும் தன்னை நம்பி ஒப்படைக்கப்பட்ட பொருட்களையும் உரியவர்களிடம் ஒப்படைத்து விட வேண்டும். ஏனெனில் பயணத்தில் அவனுக்கு மரணம் ஏற்பட்டுவிடலாம்.

2. ஹலாலான உணவைத் தயார் செய்து கொள்ள வேண்டும். தான் செலவு செய்வதற்குக் கடமைப்பட்ட மனைவி, மக்கள், பெற்றோர் ஆகியோருக்கான செலவுகளைக் கொடுத்துவிட்டுச் செல்ல வேண்டும்.

3. தல ாது குடும்பத்தினர், சகோதரர்கள், நண்பர்கள் ஆகியோரிடம் பய ணம் சொல்ல வேண்டும். அப்போது

أَسْتَوْدِعُكُمُ اللهَ الَّذِيْ لاَ تَضِيْعُ وَدَائِعُهُ

'அஸ்தவ்திவுகுமுல்லாஹல்லதீ லாதழீஉ வதாயிவுஹு' என்று அவர்களுக்காக துஆ செய்ய வேண்டும்.

(பொருள்: நான் உங்களை அல்லாஹ்விடம் ஒப்படைக்கிறேன். அவனிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்கள் வீணாகி விடுவதில்லை) அதற்கவர்கள்,

أَسْتَوْدِعُ اللهَ دِيْنَكَ وَأَمَانَتَكَ وَخَوَاتِيْمَ عَمَلِكَ

'அஸ்தவ்திவுல்லாஹ தீனக வஅமானதக வகவாதீம அமலிக' என்றும்

(பொருள்: உமது தீனையும் உமது அமானத் பொறுப்புக ளையும் பொருட்களையும் உமது பணிகளின் முடிவுகளை யும் அல்லாஹ்விடம் ஒப்படைக்கிறேன்)

زوّدك الله التقوي وغفر ذنبك ويسّر لك الخير حيث ما كنت

'ஸவ்வதகல்லாஹுத் தக்வா வக∴பர தன்பக வயஸ்ஸர லகல் கைர ஹைஸுமா குன்த' என்றும் உனக்காக துஆ செய்ய வேண்டும்.

(பொருள்: அல்லாஹ் பயபக்தியை உமக்கு பயணச் சாத னமாக்குவானாக! உமது பாவத்தை மன்னிப்பானாக! நீர் எங்கிருந்தாலும் நன்மையை உமக்கு எளிதாக்குவா னாக!) இதற்கான ஆதாரங்கள் அஹ்மத், திர்மிதி, இப்னு மாஜா ஆகியவற்றில் உள்ளன.

அல்லாஹ்வின் பொறுப்பில் ஏதும் விடப்பட்டால் அவன் அதைப் பாதுகாப்பான் என்று லுக்மான் (அலை) அவர்கள் கூறியதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: அஹ்மத்

4. தன்னுடன் பயணம் செய்வதற்குப் பொருத்தமான மூன்று, நான்கு அல்லது அதற்குகதிகமான பேர்களைத் தேர்வு செய்து அவர்களுடன் பயணம் புறப்பட வேண்டும்.

ஏனெனில் தனியாகப் பயணம் செய்பவன் ஷைத்தானா வான். இருவர் சேர்ந்து பயணம் செய்பவர்கள் இரு ஷைத்தான்களாவர். மூவர் சேர்ந்து பயணம் செய்பவர்களே பயணிகளாவர் என்று நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின அம்ர் (ரழி), நூல்: அபூதாவூத், நஸயீ, திர்மிதி

நான் அறிந்துகொள்கின்ற தனிமையின் கேடுகளை மக்கள் அறிந்தால் எவரும் இரவில் தன்னந்தனியாக பயணம் செய்ய மாட்டார் என்றும் நபி (ஸல்) கூறியுள்ளார்கள். -புகாரீ

5. பயணிகள் தங்களில் ஒருவரை அமீராக-தலைவராக நியமித்துக் கொள்ள வேண்டும். அவர் அவர்களின் ஆலோசனைப்படி அவர்களை வழிநடத்த வேண்டும்.

மூன்றுபேர் ஒரு பயணத்தில் சென்றால் தம்மில் ஒருவரை அவர்கள் அமீராக நியமித்துக் கொள்ளட்டும் என்பது நபிமொழி. (அபூதாவூத்)

6. பயணம் மேற்கொள்ளும் முன் தேவைப்பட்டால் ஸலாத்துல் இஸ்திகாரா- நன்மையை நாடித் தொழும் தொழுகையை தொழுது கொள்ள வேண்டும்.

இது விஷயத்திலும் இன்னும் எல்லா காரியங்களிலும் நபி(ஸல்)அவர்கள் இதை மிகவும் ஆர்வமூட்டியிருக்கின்றார்கள். எந்த அளவுக்கு எனில் திருக்குர்ஆனில் உள்ள ஒரு அத்தியாயத்தைக் கற்றுக் கொடுப்பதைப்போல இத்தொழுகையை மக்களுக்குக் கற்றுக்கொடுத்திருக்கின்றார்கள் என்று புகாரியில் ஒரு ஹதீஸ் உள்ளது.

7. வாகனத்தில் அமர்ந்ததும்

اَللهُ أَكْبَرُ اَللهُ أَكْبَرُ اَللهُ أَكْبَرُ سُبْحَانَ الَّذِيْ سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِيْنَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ ، اَللَّهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِيْ سَفَرِنَا هَذَا الْبِرَّ وَالتَّقْوَى وَمِنَ الْعَمَلِ مَا تَرْضَى ، اَللَّهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هَذَا وَاطْوِ عَنَّا بُعْدَهُ، اَللَّهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِي السَّفَرِ وَالْخَلِيْفَةُ فِي الْأَهْلِ، اَللَّهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ وَعْثَاءِ السَّفَرِ وَكَآبَةِ الْمَنْظَرِ وَسُوْءِ الْمُنْقَلَبِ فِي الْمَالِ وَالْأَهْلِ

அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் சுப்ஹானனல்லதீ ஸக்கரலனா ஹாதா வமா குன்னாலஹு முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன். அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக ஃபீஸஃபரினா ஹாதா அல்பிர்ர

வத்தக்வா வமினல் அமலி மாதர்ழா அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸஃபரனா ஹாதா வத்வி அன்னா புஃதா அல்லாஹும்ம அன்தஸ் ஸாஹிபு ஃபிஸ் ஸஃபர் வல்கலீஃபது ஃபில் அஹ்ல், அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மின் வஃஸாயிஸ் ஸஃபர், வகஆபதில் மன்ழர், வசூயில் முன்கலபி ஃபில் மாலி வல்அஹ்ல். (முஸ்லிம்) என்று கூற வேண்டும்.

(பொருள்: அல்லாஹ் பெரியவன்! அல்லாஹ் பெரியவன்! அல்லாஹ் பெரியவன்! இதனை வசப்படுத்தித் தந்த (இறை) வன் தூயவன். உண்மையில் இதனை வசப்படுத்தும் ஆற்றலை நாம் பெற்றிருக்கவில்லை. திண்ணமாக நாம் நம் இரட்சகனின் பக்கமே திரும்பிச் செல்பவர்கள் ஆவோம். இருக்கிறோம். இறைவா! இப்பயணத்தில் நாங்கள் உன்னிடம் நன்மையையும் இறையச்சத்தையும் கோருகிறோம். மேலும் உனக்குத் திருப்தியான அமல்களைச் செய்யும் பாக்கியத்தைக் கேட்கிறோம். இறைவா! இப்பயணத்தை எங்களுக்கு எளிதாக்குவாயாக! அதன் தூரத்தை எங்களுக்குச் சுருக்கி விடுவாயாக! இறைவா! நீயே பயணத்தின் தோழன்! எங்கள் குடும்பத்தாரின் பிரதிநிதி! இறைவா! பயணத்தின் சிரமங்கள், கவலையான தோற்றம், பொருளிலும் குடும்பத்திலும் நட்டத்தோடு திரும்பி வருவது ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)

8. வியாழக்கிழமை அதிகாலையில் (ஃபஜ்ருக்குப் பின்) புறப்பட வேண்டும்.

ஏனெனில் நபி (லஸ்) அவர்கள் இறைவா! எனது சமுதாயத்துக்கு அதிகாலையில் நீ பரகத் செய்வாயாக! என்று பிரார்த்தனை செய்துள்ளார்கள். மேலும் நபி (ஸல்) பெரும்பாலும் வியாழக்கிழமையில் பயணம் மேற்கொண்டிருக்கிறார்கள். அபூதாவூத், திர்மிதியில் இதற்கு ஆதாரம் உள்ளது.

9. வழியில் உயரமான இடத்தில் ஏறும்போது தக்பீர் சொல்ல வேண்டும்.

ஒரு மனிதர் நபி(ஸல்)அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே! நான் பயணம் மேற்கொள்ளப் போகிறேன் எனக்கு அறிவுரை கூறுங்கள் என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், நீர் இறையச்சத்தைக் கடைபிடிப்பீராக. உயரமான இடங்களில் செல்லும்போதெல்லாம் தக்பீர் கூறுவீராக என்று அறிவுரை பகர்ந்தார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: திர்மிதி

10. செல்கின்ற இடங்களில் அங்குள்ள மக்களை அஞ்சினால்,

اَللّٰهُمَّ إِنَّا نَجْعَلُكَ فِيْ نُحُوْرِهِمْ وَنَعُوْذُ بِكَ مِنْ شُرُوْرِهِمْ 'அல்லாஹும்ம இன்னா நஜ்அலுக ஃபீ நுஹூரிஹிம் வநஊதுபிக மின்ஷுரூரிஹிம்' என்று ஓத வேண்டும்.

நபி(ஸல்)அவர்கள் ஒரு கூட்டத்தை அஞ்சினால் இவ்வாறு கூறியதாக அபூதாவூதில் ஒரு ஹதீஸ் உள்ளது.

(பொருள்: இறைவா! அவர்களுக்கு எதிரில் உன்னை ஆக்குகிறோம். அவர்களின் தீமைகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம்.

11. பயணத்தில் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யவேண்டும். இவ்வுலகிலும் மறு உலகிலும் நன்மையையே வழங்குமாறு அவனிடம் வேண்ட வேண்டும். ஏனெனில் பயணத்தில் செய்யும் துஆ ஏற்றுக் கொள்ளப்படும்.

மூன்று பிரார்த்தனைகள் ஏற்றுக் கொள்ளப்படும். அதில் எந்த சந்தேகமும் கிடையாது. அவை: அநீதியிழைக்கப்பட்டவனின் பிரார்த்தனை, பயணியின் பிரார்த்தனை, தந்தை தன் பிள்ளைக்குச் செய்யும் பிரார்த்தனை ஆகியனவாகும். நபிமொழி. அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: திர்மிதி

12. ஏதாவது ஓர் இடத்தில் இறங்கினால்

أَعُوْذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ

அவூது பிகலிமாதில்லாஹித் தாம்மாத்தி மின்ஷர்ரிமா கலக் என்று கூற வேண்டும்.

(பொருள்: அல்லாஹ்வின் பரிபூரணமான வார்த்தைகளைக் கொண்டு அவன் படைத்த அனைத்துத் தீங்குகளை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்)

'ஒருவர் ஓரிடத்தில் இறங்கி மேற்கண்ட வாசகத்தைக் கூறினால் அவ்விடத்திலிருந்து அவர் புறப்படும் வரை அவருக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: கவ்லா பின்த் ஹகீம் (ரழி), முஸ்லிம்

இரவு வந்தால்,

يَا أَرْضُ رَبِّيْ وَرَبُّكِ اللهُ أَعُوْذُ بِاللهِ مِنْ شَرِّكِ وَشَرِّ مَا فِيْكِ وَشَرِّ مَا خُلِقَ فِيْكِ وَمِنْ شَرِّ مَا يَدِبُّ عَلَيْكِ وَأَعُوْذُ بِاللهِ مِنْ أُسَدٍ وَأَسْوَدَوَمِنَ الْحَيَّةِ وَالْعَقْرَبِ وَمِنَ سَاكِنِيَ الْبَلَدِ وَمِنَ وَالِدٍ وَمَا وَلَدِ

யாஅர்லு! ரப்பீ வரப்புகில்லாஹ் அஊது பில்லாஹி மின்ஷர்ரிகி வஷர்ரிமா ஃபீகி, வஷர்ரிமா குலிக ஃபீக்கி, வமின் ஷர்ரிமா எதிப்பு அலைக்கி, வஅஊது பில்லாஹி மின் ஷர்ரி அஸதின் வஅஸ்வத், வமின்ல் ஹய்யதி வல்அக்ரப், வமின் ஸாகினியல் பலத், வமின் வாலிதிவ் வமா வலத்
என்று கூற வேண்டும். -அபூதாவூத் (இது பலவீனமானது)

(பொருள்: பூமியே! உன் இறைவனும் என் இறைவனும் அல்லாஹ்தான். நான் உன் தீங்கைவிட்டும் உன்னில் இருக்கின்றவைகளின் தீங்கை விட்டும் உன்னில் படைக்கப்பட்டவைகளின் தீங்கை விட்டும் உன்னில் ஊர்ந்து செல்கின்

றவற்றின் தீங்கை விட்டும் அல்லாஹ்வைக் கொண்டு பாது காப்புத் தேடுகின்றேன். இன்னும் சிங்கம் நாகம், பாம்பு, தேள் ஆகியவற்றின் தீங்கை விட்டும் இவ்வூரில் வசிக்கின் றவர்களின் தீங்கைவிட்டும் அனைத்து ஜீவ ராசிகளிலிந்து ஏற்படுகின்ற எல்லா தீங்குகளை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)

**13. தனிமையிலிருக்கும்போது பயம் ஏற்பட்டால்**

سُبْحَانَ الْمَلِكِ الْقُدُّوْسِ رَبُّ الْمَلاَئِكَةِ وَالرُّوْحِ جُلِّلَتِ
السَّمَاوَاتُ بِالْعِزَّةِ وَالْجَبَرُوْتِ

'சுப்ஹானல் மலிகில் குத்தூஸ் ரப்பில் மலாயிகதி வர்ருஹ் ஜுல்லிலதிஸ் ஸமாவாத்து பில் இஸ்ஸத்தி வல்ஜபரூத்' என்று சொல்லவேண்டும்.

(பொருள்: வானவர்கள் மற்றும் ஜிப்ரீலுடைய இறைவன் பரி சுத்த அரசன், தூய்மையானவன்! அவனுடைய கண்ணியத் தைக் கொண்டும் அடக்கியாளும் திறனைக் கொண்டும் வானங்கள் மிகப் பிரமாண்டமாகஆக்கப்பட்டிருக்கின்றன)

**14. தான் செல்ல வேண்டிய நகரத்திற்கு வந்துவிட்டால்**

اَللّٰهُمَّ اجْعَلْ لَنَا بِهَا قَرَارًا وَارْزُقْنَا فِيْهَا رِزْقًا حَلاَلاً اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ خَيْرَ
هَذِهِ الْمَدِيْنَةِ وَخَيْرَ مَا فِيْهَا وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّهَا وَشَرِّ مَا فِيْهَا

அல்லாஹும் மஜ்அல்லனா' கராரன் வர்சுக்னா ஃபீஹா ரிஸ் கன் ஹலாலன், அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக ஹைர ஹாதிஹில் மதீனா, வகைரமா ஃபீஹா, வஅஊது பிக மின் ஷர்ரிஹா வஷர்ரி மா ஃபீஹா

என்று கூற வேண்டும். ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் இவ் வாறு கூறியுள்ளார்கள்.

(பொருள்: இறைவா! இவ்வூரை எங்களுக்கு அமைதி மிகுந்த தங்குமிடமாக ஆக்கியருள்வாயாக! எங்களுக்கு இங்கு ஹலாலான உணவை வழங்குவாயாக! இறைவா! இவ்வூரின் நன்மையையும் இவ்வூரிலுள்ளவற்றின் நன்மை யையும் நான் உன்னிடம் வேண்டுகிறேன். மேலும் இவ்வூ ரின் தீங்கைவிட்டும் இவ்வூரிலுள்ளவற்றின் தீங்கைவிட் டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்)

15. பயணத்திலிருந்து திரும்பும்போது

آئِبُوْنَ تَائِبُوْنَ عَابِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ

ஆயிபூன தாயிபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன் என்று கூற வேண்டும். மேலும் இதைத் திரும்பத் திரும்பக் கூற வேண்டும்- நபி(ஸல்)இவ்வாறு கூறியிருப்தால்.

(பொருள்: திரும்பி வருகிறோம் பாவமன்னிப்புத் தேடுகி றோம் வழிபாடு செய்பவர்களாய் இருக்கிறோம் எங்கள் இரட்சகனைப் புகழக்கூடியவர்களாயும் இருக்கிறோம்)

16. இரவில் திடீரென்று வீட்டுக்கு வந்து கதவைத் தட்டக் கூடாது. முன்னதாக தனது வருகையைப் பற்றிய நற்செய் தியை வீட்டாருக்குத் தெரிவிக்க வேண்டும். இது நபி(ஸல்) அவர்கள் காட்டிய வழியாகும். (இதற்கு ஸஹீஹான ஹதீஸ் உள்ளது)

17. ஒரு பெண் தான் திருமணம் செய்யத் தடுக்கப்பட்ட உற வினருடனேயே பயணம் மேற்கொள்ள வேண்டும்.

'அல்லாஹ்வையும் மறுமையையும் நம்பிக்கை கொண்ட பெண், திருமணம் செய்யத்தகாத உறவினருடனேயே தவிர ஒரு நாள் தூரத்திற்கு பயணம் மேற்கொள்வது ஆகுமான தல்ல' என நபி(ஸல்)கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)

## ஆடை அணிவதன் ஒழுக்கங்கள்

ஆடை விஷயத்தில் ஒரு முஸ்லிம் பின்வரும் ஒழுக்கங்களைப் பேணவேண்டும்.

1. பொதுவாக பட்டு அணியக்கூடாது. ஆடையாகவோ, தலைப் பாகையாகவோ மற்ற எதுவாக இருந்தாலும் சரி.

   எனது சமுதாயத்தில் உள்ள ஆண்களுக்கு பட்டு, தங்கம் அணிவது தடை செய்யப்பட்டுள்ளது. பெண்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூமூஸா (ரழி), நூல்: திர்மிதி

2. கரண்டைக்குக் கீழ் ஆடை அணியக்கூடாது.

   'கரண்டைக்குக் கீழ் ஆடை அணிவது நரகத்திற்குக் கொண்டுபோகுமென்பது நபிமொழி. அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி

3. ஏனைய ஆடைகளை விட வெள்ளாடைக்கே முன்னுரிமை வழங்க வேண்டும். ஆடையில் காவியைத் தவிர ஏனைய நிறங்கள் அனைத்தும் ஆகுமானதாகக் கருதவேண்டும்.

   நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: வெள்ளை ஆடைகளை அணியுங்கள். அதுவே தூய்மையானதும் சிறந்ததுமாகும். இறந்தவர்களை அதிலேயே கஃபன் செய்யுங்கள். அறிவிப்பவர்: ஸமுரா (ரழி), நூல்: நஸயீ, ஹாகிம்

4. முஸ்லிம் பெண் தன் பாதங்களை மறைக்கும் விதம் ஆடை அணியவேண்டும். மேலும் ஒரு மேலாடையைத் தலையில் போட்டு கழுத்தையும் மார்பையும் மறைத்துக் கொள்ள வேண்டும்.

   அல்லாஹ் கூறுகிறான்: நபியே! உம்முடைய மனைவிகள், உமது புதல்விகள் மற்றும் நம்பிக்கையாளர்களின்

மனைவியர் ஆகியோரிடம் கூறும்: அவர்கள் தங்களின் துப் பட்டிகளின் முந்தானையைத் தங்கள் மீது தொங்கவிட் டுக்கொள்ளட்டும். (33:59)

மேலும் தங்களுடைய மார்புகள் மீது தங்கள் முன்றா னையைப் போட்டுக் கொள்ளட்டும். (24:31)

5. தங்க மோதிரம் அணியக்கூடாது.

எனது சமுதாயத்தில் பட்டு, தங்கம் அணிவது ஆண்க ளுக்கு தடைசெய்யப்பட்டுள்ளது. பெண்களுக்கு அனும திக்கப்பட்டுள்ளது என்று நபி(ஸல்)கூறினார்கள். (திர்மிதி) வெள்ளி மோதிரம் அணிவது பற்றிக் குற்றமில்லை.

6. செருப்பு அணியும்போது முதலில் வலது காலில் அணிய வேண்டும். கழற்றும்போது முதலில் இடது காலிலிருந்து கழற்ற வேண்டும். ஒரு கால் செருப்புடன் நடக்கக்கூடாது.

'உங்களில் யாரேனும் செருப்பு அணிந்தால் முதலில் வலது காலில் அணியட்டும். கழற்றும்போது முதலில் இடது காலிலிருந்து கழற்றட்டும். உங்களில் யாரும் ஒரு செருப் பில் நடக்க வேண்டாம். இரண்டையும் கழற்றிக் கொள்ளட் டும். அல்லது இரண்டையும் அணிந்து கொள்ளட்டும்' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரை ரா (ரழி), நூல்: முஸ்லிம்

இதுபோலவே ஆடை அணியும்போதும் நடந்துகொள்ள வேண்டும்.

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: செருப்பு அணி வது, தலை வாருவது, சுத்தம் செய்வது போன்ற எல்லாக் காரியங்களிலும் நபி(ஸல்) அவர்கள் வலது புறத்திலிருந்து ஆரம்பிப்பதை விரும்புவார்கள். (முஸ்லிம்)

7. பெண்ணின் ஆடையை ஆணும் ஆணின் ஆடையைப் பெண்ணும அணியக்கூடாது. நபி(ஸல்)அவர்கள் இதைத் தடுத்துள்ளார்கள்.

பெண்ணின் ஆடையை அணிகின்ற ஆணையும் ஆணின் ஆடையை அணிகின்ற பெண்ணையும் அல்லாஹ் சபிக்கிறான் என்று நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். (ஹாகிம்)

அதுபோல ஆண்களுக்கு ஒப்பாகின்ற பெண்களையும் பெண்களுக்கு ஒப்பாகின்ற ஆண்களையும் அல்லாஹ் சபிக்கிறான் என்றும் நபி(ஸல்)அவர்கள் கூறியதாக அஹ்மத், பைஹகீயில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

8. புதிய ஆடை அணிந்தால்

اَللّٰهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسوْتَنيه أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وخَيْرِ ما صُنِع لَهُ وَأَعُوْذُ
بك مِنْ شرِّه وشرِّما صُنع له

'அல்லாஹும்ம லகல் ஹம்து அன்த கஸவ்தனீஹி, அஸ்அலுக மின் கைரிஹி வகைரமா சுனிஅலஹு வஅஊது பிக மின் ஷர்ரிஹி வஷர்ரி மா சுனிஅலஹு' என்று கூற வேண்டும். நபி (ஸல்)அவர்கள் இவ்வாறு கூறியதாக அபூதாவூத், திர்மிதியில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(பொருள்: இறைவா! உனக்கே எல்லாப் புகழும். நீயே இதை எனக்கு அணிவித்தாய். இதன் நன்மையையும் எதற்காக இது தயாரிக்கப்பட்டுள்ளதோ அதன் நன்மையையும் நான் உன்னிடம் கோருகிறேன். மேலும் இதன் தீமையை விட்டும் எதற்காக இது தயாரிக்கப்பட்டுள்ளதோ அதன் தீமையைவிட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)

# இயற்கையான சுன்னத்துகளின் ஒழுக்கங்கள்

நபிவழியில் கூறப்பட்டுள்ள இயற்கையான சுன்னத்துகள் ஐந்தாகும். நபி(ஸல்)கூறினார்கள்: இயற்கையான சுன்னத் துகள் ஐந்து. அவையாவன: மறைவிடத்தின் முடியை அகற்று வது, கத்னா செய்வது, மீசையைக் கத்தரிப்பது, அக்குள் முடியைப் பிடுங்குவது, நகங்களை வெட்டுவது. (புகாரி, முஸ்லிம்)

1. ஒரு முஸ்லிம் மறைவிடத்திலுள்ள முடியை கத்தி அல்லது பிளேடு போன்றதைக் கொண்டு மழித்துவிட வேண்டும்.

2. கத்னா செய்ய வேண்டும். கத்னா என்பது ஆண்குறியின் முன் பகுதியை மூடியிருக்கும் தோலை வெட்டிவிடுவது. குழந்தை பிறந்த ஏழாம் நாளில் இதை நிறைவேற்றிவிடு வது விரும்பத்தக்கதாகும். பருவ வயதை அடையும் வரை இதைப் பிற்படுத்துவதில் குற்றமில்லை.

3. மேல் உதட்டில் தொங்கிக்கொண்டிருக்கும் மீசையைக் கத்தரிக்க வேண்டும். தாடியைப் பொருத்தவரை அதை அடர்த்தியாக வளர்க்க வேண்டும்.

மீசையைக் கத்தரியுங்கள், தாடியை வளர விடுங்கள் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு ரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

இணைவைப்பவர்களுக்கு மாறு செய்யுங்கள். மீசை யைக் கத்தரியுங்கள், தாடியை அதிகம் வளர விடுங்கள் என்றும் நபி(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம்

தலையில் ஒரு பகுதியில் மட்டும் முடியை விட்டுவிட்டு ஏனைய பகுதியை மழிப்பதைத் தவிர்ந்து கொள்ளவேண் டும். ஏனெனில் இவ்வாறு செய்வதை நபி(ஸல்) தடுத்துள்

ளதாக இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ் புகாரீ, முஸ்லிமில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

ஒரு முஸ்லிம் தலைமுடியை அதிகம் வளர்த்துக்கொண்டால் அதைச் சீவி சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். 'தலையில் யாருக்கு முடியிருக்கிறதோ அவர் அதற்கு சங்கை செய்யட்டும்' என்பது நபிமொழி. அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரழி), நூல்: அபூதாவூத்

4. அக்குள் முடியைப் பிடுங்க வேண்டும். இயலாவிட்டால் மழித்து விட வேண்டும்.

5. இயற்கையான சுன்னத்துகளில் நகங்களை வெட்டுவதும் ஒன்றாகும். முதலில் வலதுகை பிறகு இடதுகை, முதலில் வலது கால் பிறகு இடது கால் என்று வெட்டிக்கொள்ள வேண்டும்.

ஒரு முஸ்லிம் இவையனைத்தையும் நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றுகின்ற எண்ணத்தில் செய்ய வேண்டும். அப்போதுதான் அவற்றுக்குக் கூலி கிடைக்கும். ஏனென்றால் செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொருத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதனும் அவன் எண்ணியதன் பலனையே அடைகின்றான்.

## உறங்குவதன் ஒழுக்கங்கள்

ஒரு முஸ்லிம் தூக்கத்தை, அல்லாஹ் தன் அடியார்களுக்கு வழங்கிய அருட்கொடையாகக் கருத வேண்டும்.

'அவன் உங்களுக்காக இரவையும் பகலையும் படைத்திருப்பது அவனது அருட்கொடைகளில் ஒன்றுதான். இரவில் நீங்கள் அமைதி பெறவேண்டும். பகலில் அவனுடைய அருட்கொடையை நீங்கள் தேடவேண்டும் என்பதற்காக' (28:73)

ஒரு முஸ்லிம் தான் தூங்கும்போது பின்வரும் ஒழுக்கங்களைப் பேணுவது இந்த அருட்கொடைக்கு நன்றி செலுத்துவதாக அமையும்.

1. இஷாத் தொழுகைக்குப் பிறகு தூக்கத்தைப் பிற்படுத்தக் கூடாது- பாடம் படிப்பது, விருந்தினரிடம் உரையாடுவது, மனைவியுடன் சல்லாபம் புரிவது போன்ற அவசியத் தேவைகளுக்காகவே தவிர.

   நபி(ஸல்)அவர்கள் இஷாவுக்கு முன்பு தூங்குவதையும் இஷாவுக்குப் பிறகு பேசுவதையும் விரும்பமாட்டார்கள். அறிவிப்பவர்: அபூபஸ்ரா (ரலி), நூல்: புகாரி, முஸ்லிம்.

   (நபி(ஸல்) அவர்கள் இரவில் மார்க்க சம்பந்தமாகப் பேசியிருக்கிறார்கள் என்பதற்கு புகாரியில் சான்றுள்ளது)

2. உளூவோடு தூங்குவதற்கே முயற்சி செய்ய வேண்டும்.

   நீ படுக்கைக்கு சென்றால் தொழுகைக்கு உளூச் செய்வதுபோல உளூச் செய்துகொள் என்று நபி(ஸல்)அவர்கள் பர்ராஉ பின் ஆசிப் (ரலி) அவர்களிடம் கூறினார்கள். நூல்: புகாரி, முஸ்லிம்.

3. ஆரம்பத்தில் வலது கையைத் தலையணையின் மீது வைத்து வலது புறமாகப் படுக்கவேண்டும். பிறகு இடது புறம் திரும்பிக்கொள்வதில் குற்றமில்லை.

   நீ படுக்கைக்கு சென்றால் தொழுகைக்கு உளூச் செய்வதுபோல உளூச் செய்துகொள். பிறகு வலது புறமாகப் படுத்துக்கொள் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: பர்ராஉ பின் ஆசிப் (ரலி), (புகாரி, முஸ்லிம்)

   மற்றொரு அறிவிப்பில் “நீ உளூச் செய்து கொண்டு படுக்கைக்குச் சென்றால் வலது கையை தலைக்கு கீழ் வைத்துக்கொள்” என்று வந்திருக்கின்றது.

3. இரவிலோ பகலிலோ தூங்கும்போது குப்புறப்படுத்துக் கொள்ளக்கூடாது.

"இது அல்லாஹ் விரும்பாத படுக்கையாகும்" என்று நபீ (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (ஸஹீஹான ஹதீஸ்)

4. இயன்றவரை ஹதீஸ்களில் வந்துள்ள பல்வேறு திக்ருகளைக் கூறிக்கொள்ள வேண்டும். அவற்றில் சில:

- சுப்ஹானல்லாஹ் 33 தடவை, அல்ஹம்துலில்லாஹ் 33 தடவை, அல்லாஹு அக்பர் 34 தடவை ஓதுவது.

பாத்திமா (ரலி) அவர்களும் அலி (ரலி) அவர்களும் நபீ (ஸல்) அவர்களிடம் வீட்டில் தங்களுக்கு உதவி செய்யக் கூடிய ஒரு பணியாளை வேண்டியபோது "நீங்கள் கேட்டதை விடச் சிறந்ததை நான் உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா? நீங்கள் படுக்கைச் சென்றால் சுப்ஹானல் லாஹ் 33 தடவை, அல்ஹம்து லில்லாஹ் 33 தடவை, அல்லாஹு அக்பர் 34 தடவை ஓதுங்கள். அது உங்களுக்கு பணியாளை விடச் சிறந்ததாகும் என்று நபீ (ஸல்) கூறினார்கள். (முஸ்லிம்)

- சூரத்துல் ஃபாத்திஹா, ஆயத்துல் குர்ஸி, சூரத்துல் பகராவின் ஆரம்ப நான்கு வசனங்கள், சூரத்துல் பகராவின் கடைசி இரு வசனங்கள், குல்ஹுவல்லாஹு அஹத், குல் அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்நாஸ் ஆகியவற்றை ஓதுவது. காரணம் இதுபற்றி ஹதீஸில் ஆர்வமூட்டப்பட்டிருக்கின்றது.

- தூங்கி எழுந்ததும் 'அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃதமா அமாத்தனா வஇலைஹின் நுஷூர்'

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُوْرُ

என்று ஓத வேண்டும். இதற்கு ஆதாரம் உண்டு.
(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே நம்மை மரணம் என்னும் தூக்கத்தில் ஆழ்த்தியபின் உயிர் பெற்றெழச் செய்தான். மேலும் (நாளை மறுமையில்) மீண்டும் எழுப்பப்பட்டு அவனிடமே செல்ல வேண்டியுள்ளது)